*Issued*—23-6-1959







# MADRAS LEGISLATIVE ASSEMBLY DEBATES

# OFFICIAL REPORT

## TUESDAY, 10TH FEBRUARY 1959

### VOLUME XVIII—No. 1




*CONTENTS*



TAMIL NADU LEGISLATIVE ASSEMBLY
TRUTH ALONE TRIUMPHS

©
GOVERNMENT OF MADRAS
1959

*Legislature (Assembly) Department*
*Madras*

PRICE, 37 *naye Paise*]




# MADRAS LEGISLATIVE ASSEMBLY DEBATES

**FIFTH SESSION OF THE SECOND LEGISLATIVE ASSEMBLY UNDER THE CONSTITUTION OF INDIA.**

10*th to* 14*th February* 1959.

**Volume XVIII (Nos. 1 to 5)**

TABLE OF CONTENTS.

TAMIL NADU LEGISLATIVE ASSEMBLY
TRUTH ALONE TRIUMPHS

9 JUL 1959
STATE LEGISLATURE MADRAS

# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Tuesday, the 10th February 1959.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at nine of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

### STARRED QUESTIONS.

*Mettalling of village roads*

* 161 *Q.*—SRI M. C. MUTHUKUMARASWAMY : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether there is any scheme for metalling the village roads in Tanjore district; and

(*b*) if so, the amount sanctioned?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) There is no separate scheme for metalling village roads in Tanjore district.

(*b*) Does not arise.

**SRI G. G. GURUMURTHI** : நமது மாகாணத்திற்கென்று கிராம ரஸ்தாக்களுக்கு அபிவிருத்தித் திட்டம் ஏதாவது இருக்கிறதா? அப்படி இருந்தால் அந்த விவரங்கள் என்ன என்று அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM** : கம்யூனிடி டெவலெப்மெண்டு ஸ்கீம்படி அங்கங்கே ரோடுகள் அமைக்கும் திட்டம் இருக்கிறது. ஸ்தல ஸ்தாபன திட்டத்தின்கீழும் அவ்வேலை செய்யப் பட்டு வருகிறது. ஸ்தல அபிவிருத்தித் திட்டங்களின் மூலமாகவும் எடுத்துக் கொள்ளலாம்.

**SRI C. MUTHIAH PILLAI** : ஜில்லா போர்டில் நிதி இல்லாத காரணத்தினால் இரண்டு வருஷங்களாக இருக்கிற ரோடுகளைப் பராமரிக்கவும் முடியவில்லை. புதிதாக ரோடுகள் போடவும் முடியவில்லை. ஆகவே இதை கவனித்து அவற்றுக்கு தக்க பணம் ஒதுக்கியாவது ரோடுகளைப் பராமரிக் கவும், புது ரோடுகளை அமைக்கவும் சர்க்கார் முன்வருமா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM** : ஜில்லா போர்டுகளின் நிதியைப் பொருத்த வரையில் அவர்களுடைய தேவையை அனுசரித்து போக்குவரத்துக்குப் பணம் ஒதுக்கப்படுகிறது. ஒவ்வொரு ஜில்லாவிலும் அங்குள்ள நிதி நிலைமையை அனுசரித்துத்தான் புது வேலை எடுத்துக்கொள்ளப்படும்.

**SRI S. LAZAR** : நாட்டின் முன்னேற்றத்திற்கு நல்ல ரோடுகளும், டிரான்ஸ்போர்ட் வசதியும்தான் மிகமிகத் தேவை. இதற்கு ஏற்றபடி ஒரு திட்டத்தைத் தயாரிக்க அரசாங்கம் முன்வருமா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM** : இதை அனுசரித்துத் தான் மற்றவர்கள் பாராட்டும்படியாக நம் ராஜ்யத்தில் பல ரோடுகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இந்த ரோடு பராமரிப்பு வேலையும், புதிதாக ரோடு போடுகின்ற வேலையும் நடந்து வருகிறதென்று நினைக்கிறேன்.

9 JUL 1959
STATE LEGISLATURE MADRAS

# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Tuesday, the 10th February 1959.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at nine of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

### STARRED QUESTIONS.

*Mettalling of village roads*

* 161 *Q*.—SRI M. C. MUTHUKUMARASWAMY : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether there is any scheme for metalling the village roads in Tanjore district; and

(*b*) if so, the amount sanctioned?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) There is no separate scheme for metalling village roads in Tanjore district.

(*b*) Does not arise.

**SRI G. G. GURUMURTHI** : நமது மாகாணத்திற்கென்று கிராம ரஸ்தாக்களுக்கு அபிவிருத்தித் திட்டம் ஏதாவது இருக்கிறதா? அப்படி இருந்தால் அந்த விவரங்கள் என்ன என்று அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM** : கம்யூனிடி டெவலெப்மெண்டு ஸ்கீம்படி அங்கங்கே ரோடுகள் அமைக்கும் திட்டம் இருக்கிறது. ஸ்தல ஸ்தாபன திட்டத்தின்கீழும் அவ்வேலை செய்யப் பட்டு வருகிறது. ஸ்தல அபிவிருத்தித் திட்டங்களின் மூலமாகவும் எடுத்துக் கொள்ளலாம்.

**SRI C. MUTHIAH PILLAI** : ஜில்லா போர்டில் நிதி இல்லாத காரணத்தினால் இரண்டு வருஷங்களாக இருக்கிற ரோடுகளைப் பராமரிக்கவும் முடியவில்லை. புதிதாக ரோடுகள் போடவும் முடியவில்லை. ஆகவே இதை கவனித்து அவற்றுக்கு தக்க பணம் ஒதுக்கியாவது ரோடுகளைப் பராமரிக் கவும், புது ரோடுகளை அமைக்கவும் சர்க்கார் முன்வருமா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM** : ஜில்லா போர்டு களின் நிதியைப் பொருத்த வரையில் அவர்களுடைய தேவையை அனு சரித்து போக்குவரத்துக்குப் பணம் ஒதுக்கப்படுகிறது. ஒவ்வொரு ஜில்லா விலும் அங்குள்ள நிதி நிலைமையை அனுசரித்துத்தான் புது வேலை எடுத்துக்கொள்ளப்படும்.

**SRI S. LAZAR** : நாட்டின் முன்னேற்றத்திற்கு நல்ல ரோடுகளும், டிரான்ஸ்போர்ட் வசதியும்தான் மிகமிகத் தேவை. இதற்கு ஏற்றபடி ஒரு திட்டத்தைத் தயாரிக்க அரசாங்கம் முன்வருமா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM** : இதை அனுசரித்துத் தான் மற்றவர்கள் பாராட்டும்படியாக நம் ராஜ்யத்தில் பல ரோடுகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இந்த ரோடு பராமரிப்பு வேலையும், புதிதாக ரோடு போடுகின்ற வேலையும் நடந்து வருகிறதென்று நினைக்கிறேன்.

**Sri V. SUBBIAH** : ஜில்லா போர்டுகளில் பணம் இல்லையென்ற நிலைமை இருப்பதால் பணத்தைக் கொடுத்து அவர்களையேச் செய்யச் சொல்வதைவிட, நேஷனல் ஹைவேஸ், பப்ளிக் வொர்க்ஸ் மூலமாக சர்க்காரே எல்லா ரோடுகளையும் எடுத்துக் கொள்ளும் உத்தேசம் உண்டா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : பஞ்சாயத்துச் சட்டம் நிறைவேறும்போது இதைப் பற்றி விவரித்துக் கூறியிருக்கிறேன். எந்த எந்த ரோடுகளை சர்க்கார் எடுத்துக் கொள்ளும், எந்த எந்த ரோடுகளின் பொறுப்பு பஞ்சாயத்து யூனியனுக்கும், எந்த எந்த ரோடுகள் கிராம பஞ்சாயத்தின் நிர்வாகத்திலும் வரும் என்று வரையறுக்கப்பட்டிருக்கிறது.

**Sri M. R. KANDASWAMI MUDALIYAR** : பிர்கா அபிவிருத்தித் திட்டத்தின்கீழ் மண் ரோடுகள் போடப்பட்டன. உடனே கப்பி போட முடியாத காரணத்தினால் அவை அப்படியே விடப்பட்டு, இன்று வண்டி கூடப் போவதற்கு முடியாமல் இருக்கின்றன. ஆகவே கிராம ரஸ்தாக்களை சர்க்கார் அபிவிருத்தி செய்ய முன் வருவார்களா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : பஞ்சாயத்து யூனியன் திட்டத்தின்கீழ் எடுத்துக் கொண்டு அவைகளை நல்லமுறையில் நடத்த முடியும் என்று நினைக்கிறேன்.

*State Trading Scheme*

* 162 *Q*.—**Sri K. SATTANATHA KARAYALAR** : Will the Hon. the Minister for Home be pleased to state the details of the State Trading Scheme decided by the National Development Council in the first week of November 1958?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : The details of the Scheme of State Trading in foodgrains are being worked out by the Government of India and they are awaited.

**Sri N. K. PALANISAMI** : ஸ்டேட் ட்ரேடிங் என்று சொல்லிக் கொண்டு 2 லட்சம் டன் கொள்முதல் செய்தவுடன் பாக்கியைக் கொள்முதல் செய்ய லைசென்சு வழங்கப்படுமா ? அல்லது எல்லாவற்றையும் சர்க்காரே கொள்முதல் செய்வார்களா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : இதில் கனம் அங்கத்தினருக்கு எப்படி ஐயம் எழுந்தது என்று தெரியவில்லை. இந்தத் திட்டத்தின் விவரங்கள் எல்லாம் இப்போதுதான் பரிசீலனையில் இருப்பதாகக் கூறினேன். அதற்கு முன்னதாக 2 லட்சம் டன் வாங்குவதாக ஏற்பாடு.

**Sri S. LAZAR** : இது சம்பந்தமாக நமது அரசாங்கம் மத்திய அரசாங்கத்திற்கு ரிப்போர்ட் தயாரித்துக் கொடுத்திருக்கிறதா ? அதன் அம்சம் என்ன ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : இந்த அரசாங்கம் ஸ்டேட் ட்ரேடிங் பற்றி எப்படி திட்டம் வகுப்பது என்று குறித்து மத்திய அரசாங்கத்திற்கு அனுப்பியிருக்கிறது. இதுவெல்லாம் பரிசீலனை செய்து முடிவு செய்கிற வரையில் அதைப்பற்றி வெளியிடுவது உசிதம் இல்லை.

**Sri S. M. ANNAMALAI** : கம்பு, சோளம், போன்ற பொருள்களின் விலையும் ஏறியிருக்கிறது. அவைகளையும் கூட வாங்குவதற்கு இந்தச் சர்க்கார் முன் வருமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : அவைகளை வாங்குவது என்ற யோசனை அரசாங்கத்தினிடம் இல்லை.

10th February 1959]

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : May I know when this is likely to be finalised? After finalisation, will the Government be pleased to place a copy of the scheme on the table?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I cannot say when the State Trading Scheme will be finalised. It is being worked out and as soon as it is finalised certainly a copy will be placed on the table of the House.

SRI M. D. THIAGARAJA PILLAI : தலைவர் அவர்களே, நெல், அரிசி கொள்முதல் செய்வதில் முதல் ரேட்டாக, கடைசித் தரத்தில் இருந்து வி. 20 ரகத்தை மாற்றியிருக்கிறார்கள். ஆனால் தஞ்சாவூரில் கட்டைச் சம்பா நெல் அதிகம் விளைகிறது. அதை இரண்டாம் தரம் என்று நிர்ணயித்து விலையை குறைத்திருக்கிறார்கள். அதையும் உயர்த்த அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதிகமாக ஒரு ரகத்தை உற்பத்தி செய்வதனால் மட்டும் விலையை உயர்த்த முடியாது. தனித்தனியாக அந்த அந்த ரகத்தைப் பிரித்திருக்கிறார்கள். வியாபாரிகளையும், உற்பத்தி செய்கிறவர்களையும் சிவில் சப்ளை அதிகாரிகள் கலந்து கொண்டு நிர்ணயிப்பது.

*Economic prices for agricultural produce*

* 163 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether any decision has been taken at the meeting of the National Development Council held in November 1958 to guarantee minimum economic prices for agricultural produce; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) In view of the answer to (*a*) above, this question does not arise.

SRI N. K. PALANISAMI : பதினைந்து ரூபாய், பத்தொன்பது ரூபாய் என்று ஒரு மணங்குக்கு நிர்ணயம் செய்திருக்கிறார்கள். அது அவசியமா ? ஹோல் சேலாக இரண்டு லட்சம் டன் வாங்கினவுடன் நிறுத்தி விடுவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : செய்யப்பட்டிருக்கிற விலை நிர்ணயம் இரண்டு லட்சம் டன் வாங்குவதற்காக மட்டும் அல்ல. மொத்தமாக விலை நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது. இந்த ஹோல்சேல் விலை. ஏஜெண்டுகள் மூலமாகத்தான் விற்கவேண்டும் என்பது இல்லை. உற்பத்தியாளர்கள் நேரடியாக அரசாங்கத்திடமே விற்கலாம்.

SRI T. SAMPATH : May I know on what basis prices of paddy and rice were fixed? Have Government any intention of fixing floor prices for paddy and rice?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Government have taken into account the price factors prevailing in the Southern States and fixed maximum prices.

SRI M. KALYANASUNDARAM : இப்போது நிர்ணயிக்கப் பட்டிருக்கிற விலையானது வியாபாரிகளிடமிருந்தும், மில் சொந்தக்காரர்களிட மிருந்தும் வாங்குவதற்காகவா ? அவர்கள் விவசாயிகளிடத்திலிருந்து என்ன விலைக்கு வாங்குவார்கள் ? இதனால் விவசாயிகள் நிலை பாதிக்கப்படாமலிருக்க சர்க்கார் என்ன நடவடிக்கை எடுக்க உத்தேசித் திருக்கிறார்கள் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வியாபாரிகள் இப்படி நிர்ணயிக்கப்பட்டிருக்கிற விலைக்குக் கேட்காவிட்டால் விவசாயிகள், அரசாங்கத்திடமே நேரிடையாக விற்கலாம் என்று சொன்னேன். ஆகவே வியாபாரிகள் விவசாயிகளைச் சுரண்ட முடியாது.

SRI K. PERIANNAN : விலைபொருளின் விலையைக் கட்டுப்படுத்தக் கூடிய நமது சர்க்கார் விவசாயத்திற்கு வேண்டிய இதர பொருள்களின் விலையையும் கட்டுப்படுத்துமா என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அது வேறு விஷயம். அதில் எந்த அளவு, கட்டுப்படுத்த முடியும் என்று நான் சொல்வதற்கில்லை.

*Procurement of paddy*

* 164 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether there was a discussion in the National Development Council meeting held in November 1958 about the procurement of paddy in the State by the State Government; and

(*b*) the stand taken by the Government during the debate?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes.

(*b*) This Government was in support of the proposal.

SRI N. K. PALANISAMI : வாங்குவதற்கு சீலிங் ப்ரைஸ் வைத் திருப்பதைப்போல விற்பதற்கும் சீலிங் ப்ரைஸ் நிர்ணயம் செய்யப்பட வில்லையா ? இதனால் நடுவில் வியாபாரிகள் கொள்ளை லாபம் அடிக்க வசதி உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அரசாங்கத்திடமே நேரில் விற்கலாம் என்று நான் முன்பே சொல்லியிருக்கிறேன்.

SRI K. B. S. MANI : சர்க்கார் விலை நிர்ணயித்திருந்தாலும் பக்கத்து ராஜ்யங்களைச் சேர்ந்த வியாபாரிகள் அதிக விலைக்கு தஞ்சாவூர் ஜில்லா நெல்லை வாங்கிப்போகத் தயாராக இருக்கிறார்கள். அவர்களுக்கு விலை நிர்ணயம் செய்யப்படவில்லை. ஆகவே இப்படி வெளியில் இருந்து வியாபாரிகள் வந்து கொள்முதல் செய்வதைத் தடுக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இரண்டொரு நாட்களுக்குள் கேரள அரசாங்கமும் விலை நிர்ணயம் செய்துவிடும்.

SRI N. K. PALANISAMI : நேரிடையாக சர்க்காரே ஹோல் சேலில் வாங்கலாம் என்றும் அப்படி வாங்குவதற்குப் போதிய ஆபீசர்களையும் இந்தச் சர்க்கார் ஏற்பாடு செய்திருக்கிறார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நான் சொன்ன பதிலில் அப்படி வாங்கிக்கொள்வதற்குத் தயார் என்றுதான் சொன்னேன். விவசாயிகள் அப்படி சர்க்காரிடத்தில் நேரிடையாக விற்க முன் வரமாட்டேன் என்கிறார்கள் என்பதுதான் புகார். அவர்கள் பதுக்கி வைத்துக் கொள்கிறார்கள் என்பதுதான்.

10th February 1959]

**Sri N. K. PALANISAMI**: When fixing the price of paddy to be procured from producers, will the Government take into consideration the cost of production in the seed farms also?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: Certainly, Sir, the cost of production, that is the cost of seeds that are supplied to the agriculturists and other items contributing towards the cost of production are being taken into account.

**Sri S. LAZAR**: இந்த திட்டம் நல்ல முறையிலே வேலைசெய்ய வேண்டுமென்று சொன்னால் நாம் கொள்முதல் செய்வது போலவே தென் மண்டலத்தைச் சேர்ந்த மற்ற மாகாணங்களும் கொள்முதல் செய்யக்கூடிய வகையில் ஈடுபடவேண்டும். அப்படி இருந்தால் அதற்கு நமது அரசாங்கம் என்ன செய்திருக்கிறது ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: கொள்முதல் செய்கிறார்களோ இல்லையோ, நாம் குறிப்பிட்டது போலவே ஆந்திரா மாகாணத்திலும், மைசூர் மாகாணத்திலும் அதிக பட்ச விலை நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அந்த அரசாங்கங்களிலே கொள்முதல் செய்கின்றன. கேரளத்தில் சீக்கிரத்தில் அதிகபட்ச விலை நிர்ணயிக்கப்படும். நான் டில்லிக்கு போயிருந்தபோது கேரள மந்திரியுடன் பேசியபோது அவர்களும் கொள்முதல் செய்வதாக சொன்னார்கள்.

**Sri N. K. PALANISAMI**: கொள்முதல் செய்யவேண்டியது இரண்டு லட்சம் டன் நெல் என்று முடிவுக்கு வரக்காரணம் என்ன ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: இரண்டு லட்சம் டன் போதும் என்று அல்ல. கொள்முதல் செய்வதினால் அல்ல. வேறு காரணங்களை ஒட்டி. அதிகபட்ச விலை நிர்ணயித்து அதை அமுல் நடத்துவதற்கு நாமே நடந்த இருந்தால் நியாயவிலை கடைகள் திறப்பதற்கும்—நியாயவிலை கடைகள் என்று சொல்லும்போது மற்ற கடைகள் எல்லாம் அநியாயவிலை கடைகளாக இருப்பதாகத்தான் குறிப்பிட வேண்டி இருக்கிறது.—அடுத்த ஆண்டில், உற்பத்தி குறைந்தால் அதற்குத் தயாராக இருக்கவேண்டுமென்று பல காரணங்களை ஒட்டி கொள்முதல் செய்யப்படுகிறது.

**Sri C. NATARAJAN**: கொள்முதல் செய்வதற்கு ரெவின்யூ டிவிஷனல் ஆபீசர் கிரேட் அதிகாரியைப் போட்டிருப்பதாக தெரிகிறது. கொள்முதல் செய்யும்போது ஈரமாக இருக்கிறதா அல்லது சரியானபடி நெல் இருக்கிறதா என்பதுகூட அவர்களுக்குத் தெரியாது. ஆகையால் விவசாயம்பற்றி தெரிந்த அதிகாரிகளை நியமித்து கொள்முதல் செய்ய அரசாங்கம் முன்வருமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: விவசாய அதிகாரிகளைக் கலந்துகொண்டுதான் அவர்கள் எல்லாம் பரிசீலனை செய்து முடிவு செய்வார்கள.

**Sri T. SAMPATH**: கனம் அமைச்சர் அவர்கள் கேரள அரசாங்கமே விலையை நிர்ணயிப்பதாகச் சொன்னார்கள். அப்படி செய்யும்போது நம் அரசாங்கத்தின் விலையை அனுசரித்து அந்த விலைகள் இருக்குமா என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: அவ்வாறு தான் இருக்கும். அங்கே எவ்வாறு நிர்ணயித்திருக்கிறார்கள் என்று பார்த்து, அதை ஒப்பிட்டுத்தான் விலையை நிர்ணயம் செய்வார்கள்.

SRI P. G. MANICKAM : நெல் முதலியவைகளை பதுக்கிவைத்து கள்ள மார்க்கட்டில் விற்கும் வியாபாரிகள்மீதும் விவசாயிகள் மீதும் என்ன நடவடிக்கை எடுக்க திட்டமிட்டிருக்கிறார்கள் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : யாராவது பதுக்கி வைத்திருந்தால் அவர்கள்மீது தகுந்த நடவடிக்கை எடுக்கப்படும். முக்கியமான நடவடிக்கை பதுக்கப்பட்ட நெல்லை எடுத்துக்கொள்வது.

SRI M. KALYANASUNDARAM : தேசிய அபிவிருத்தி கவுன்சில் உணவு தான்யத்தின் மொத்த வியாபாரம் பூராவுமே அரசாங்கம் எடுத்து நடத்தவேண்டுமென்று சிபார்சு செய்திருந்தும் இப்போது இரண்டு லட்சம் டன் மட்டும் வாங்க முடிவு செய்திருப்பதன் காரணம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தேசிய அபிவிருத்தி கவுன்சில் சிபார்சின் மீது செய்யப்பட்ட ஸ்டேட் டிரேடிங் ஸ்கீம் என்று சற்று முன்தான் சொன்னேன். ஸ்டேட் டிரேடிங் ஸ்கீம் எவ்வாறு உருவாக்குவது என்று பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது. அதுவரையில் காத்துக்கொண்டிராமல் தற்போது இரண்டு லட்சம் டன் வரை வாங்கலாம் என்று ஏற்பாடு செய்து வருகிறோம்.

*Stocks of foodgrains with wholesalers*

* 165 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state whether any action has been taken on the decision of the National Development Council held during November 1958, regarding the declaration of stocks of foodgrains with wholesalers?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : This Government have issued the Madras Foodgrains Dealers' Licensing Order, 1958, under which all dealers who carry on business in wheat, rice and paddy (including their products) in quantity of 50 maunds or more at any one time will have to submit to the Commercial Tax Officer concerned a fortnightly return showing the stocks held at the beginning of each fortnight, quantities purchased and sold during the fortnight and the balance held at the end of the fortnight (including the stocks pledged by them).

SRI N. K. PALANISAMI : இந்த உத்திரவின் காரணமாக பல மில்கள் கொள்முதல் செய்வதை நிறுத்தியிருக்கிறார்கள். வேண்டுமென்று இந்த உத்திரவுக்குக் கீழ்படியா விட்டால் லைசென்சை கான்சல் செய்யப் படுமென்று ஒரு உத்திரவு போடமுடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த நிலைமைக்குச் செல்லும்போது பரிசீலனை செய்து தகுந்த நடவடிக்கை எடுக்கும் அவசியம் இருந்தால் லைசென்சும் ரத்து செய்யப்படும்.

SRI A. A. RASHEED : What is the price that would be paid to stockholders by the Government?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The price that has been fixed for the various varieties of paddy will apply to the stocks that was there on the 2nd February.

10th February 1959]

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : சர்க்கார் உணவு விலை கட்டுப்பாடு காரணமாக விவசாயிகளுக்கும் கட்டுபடியாகவில்லையானால் அது விவசாயத்தை பாதிக்காதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்பொழுது இந்தப் பிரச்னை எழவில்லை. நியாய விலையிலேதான் அதிகபட்ச விலையாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

SRI N. K. PALANISAMI : நிவாரணக்கடைகள் வைத்துக்கொள்வதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அவைகளுக்கு கொள்முதல் செய்யும்போது அரிசியை சப்சிடைஸ்ட் ரேட்டில் விற்க ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Subsidised rate-ல் விற்பதற்கு வற்புறுத்த வேண்டும் என்று அரசாங்கத்திற்கு இல்லை. அப்படி விற்கவேண்டும் என்ற அவசியமும் இல்லை. இப்பொழுது அதிகபட்ச விலை நிர்ணயித்திருக்கிறோம். நியாயவிலையில் எல்லாவிடத்திலும் விற்கவேண்டிய விலை அதிகபட்ச விலையாக நிர்ணயித்திருக்கிறோம். இதை அமுலாக்க வேண்டும். நியாயவிலை கடைகள் அமைக்க வேண்டிய அவசியம்

MR. SPEAKER : Shall we take up the remaining three questions on the same subject (168, 193 and 194) also now, if the Hon. Minister has no objection?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir. They may be taken up now.

*State Trading Corporation*

* 168 *Q*.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state whether there is any proposal to entrust the trading in grains to the State Trading Corporation?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir.

SRI A. A. RASHEED : Will the State Trading Schemes be confined to this State only or will it function as a unit for the whole of India?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I have said that we have not yet finalised the scheme of State Trading but perhaps under the scheme which we contemplate, it will have its own organization.

SRI S. LAZAR : இப்பொழுது இருக்கக்கூடியமுறையில், சர்க்கார் கொள்முதல் செய்யவேண்டுமென்றிருக்கிறது. மில்கள் வாங்கக்கூடிய விலை அந்தந்த இடத்தைப்பொறுத்திருக்கிறது. அதற்குச் சர்க்கார் என்ன செய்யப் போகிறார்கள்? சர்க்கார் எல்லோரிடமிருந்தும் ஒரே விலையில் வாங்குமா ? அல்லது போக்குவரத்திற்குத் தகுந்தபடி ஏதாவது ஈடு செய்யுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப்பற்றி சில மில்கள் தெரிவித்திருக்கிறார்கள். ஆனால் சர்க்கார், அவர்கள் எங்கிருந்து நெல் வாங்கிக்கொண்டுவருகிறார்கள் என்றும், அவர்கள் எவ்வளவு வண்டி சத்தம் கொடுத்துவருகிறார்கள் என்றும் பார்த்து இதை நிர்ணயிப்பது எவ்வாறு என்று பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது.

[10th February 1959

**Sri M. KALYANASUNDARAM**: இப்பொழுது இரண்டு லட்சம் டன் கொள்முதல் செய்யப்படும் என்றும் சர்க்கார் மொத்த வியாபாரம் செய்வது பரிசீலனையில் இருக்கிறது என்றும் கூறினார்கள். சர்க்காரே மொத்த வியாபாரம் பூராவும் எடுத்து நடத்த ஏற்பாடுகள்பற்றி எப்போது இறுதி முடிவு செய்யப்படும்? இந்த அறுவடை காலத்திற்குள்ளேயே செய்யப் படுமா? இல்லையென்றால் எவ்வளவு காலம் ஆகும் ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: இந்த அறுவடை காலத்திற்குள்ளேயே முடிவு எடுக்கவேண்டுமென்று சொல்ல முடியாது. மற்ற ராஜ்யங்களையும் இதைப்பற்றி கேட்டிருக்கிறார்கள். இவைகளை பரிசீலனை செய்து பிறகு அவர்களுடன் முடிவு செய்யவேண்டும். ஏனென்றால் ஒவ்வொரு ராஜ்யத்திலும் தனித்தனியாக ஒரு ஏற்பாடு செய்துகொள்வது சரி அல்ல.

**Sri K. VINAYAKAM**: Sir, is it not a fact that State Trading Schemes are undertaken with a view to helping the consumers in a state of emergency, when food becomes scarce and if so, what useful purpose would be served when the tense situation eases? So, will the Government expedite the scheme of trading in foodgrains as early as possible, as there is a state of emergency now?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: This is a big comprehensive scheme. As it is a new scheme, it has to be examined in all its aspects and there should not be any hurry in finalising it. But in order to afford relief to the consumers and getting over the present situation, the Government have already taken steps to fix the maximum prices and also purchase certain quantities of rice and paddy.

**Sri A. A. RASHEED**: Did the Government receive any protest from the foodgrain dealers and if so, what are their grounds of protest?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: Protests from vested interests are to be expected.

**Sri A. VEDARATHNAM**: கேரளத்திற்குத் தேவையான தானியங்களை அங்கேயுள்ள தனிப்பட்ட வியாபாரிகளோ அல்லது அரசாங்கமோ இங்கிருந்து நேரில் கொள்முதல் செய்யாதபடி நமது அரசாங்கமே அவர்களுக்குத் தேவையான உணவு தானியங்களை இங்கிருந்து ஸப்ளை செய்ய முன்வருமா ? அவர்கள் நேரிடையாக இங்கிருந்து வாங்கினால் அவர்கள் அதிக விலை கொடுக்க நேரிடுகிறது. இதைத் தடுப்பதற்காக தாங்களே அவர்களுக்காகக் கொள்முதல் செய்ய நமது அரசாங்கத்தார் முன்வருவார்களா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: கேரளத்திலும் உணவு தானியங்களுக்கு அதிகப் பட்ச விலை நிர்ணயிக்கப்படும் என்று சொன்னேன். மேலும், அங்கே அது நம் மாநிலத்தின் அதிகப் பட்ச விலையை யொட்டியே நிர்ணயிக்கப்படும் என்றும் சொன்னேன். அரிசியைக் கொள்முதல் செய்வதை, ஸ்டேட் ட்ரேடிங் கார்ப்பொரேஷன் ஆரம்பிக்கப்பட்ட பிறகு, கேரள அரசாங்கமே ஏற்றுக்கொள்ளும்.

**Mr. SPEAKER**: Question Nos. 193 and 194 may be taken up together as they relate to the same subject.

10th February 1959]

*State Trading in Foodgrains*

* 193 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government have received any scheme from the Planning Commission regarding State Trading in foodgrains; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes.

(*b*) It is not in the public interest to reveal the details of the scheme at this stage.

*** 194 *Q*—SRI P. G. MANICKAM** : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை சர்க்காரே உணவு தான்ய வியாபாரம் நடத்தும் திட்டம் பற்றிய பரிசீலனை எதாவது நடத்தப்பட்டு வருகிறதா ?

(ஆ) இது சம்பந்தமாக மத்திய சர்க்காரோடு சென்னை சர்க்காரால் நடத்தப்பட்டு வரும் கடிதப்போக்குவரத்து விவரங்கள் யாவை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes.

(*b*) It is not in the public interest to reveal the correspondence with the Government of India at this stage.

**SRI M. D. THIAGARAJAN** : மில் சொந்தக்காரர்கள் வெளிமாநிலங்களிலிருந்து லாரிகளில் உணவு தானியங்களை அதிகமான விலைக்கு வாங்கிவந்தார்கள். இப்போது, அரசாங்கத்தார் உணவு தானியங்களுக்கு அதிகபட்ச விலை நிர்ணயித்திருப்பதால் அவர்கள் வெளிமாநிலங்களிலிருந்து அவைகளை வாங்கிவரத் தயங்குகிறார்கள். இந்தப் பிரச்னையைத் தீர்ப்பதற்கு அரசாங்கம் என்ன ஏற்பாடு செய்ய உத்தேசித்திருக்கிறது.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : கேரளாவில் அதிகப்பட்ச விலை இன்னும் நிர்ணயிக்கப்படாமல் இருப்பதால் இவ்வாறெல்லாம் சொல்லப்படுகிறது. கேரளாவில் சீக்கிரத்திலேயே அதிகப்பட்ச விலை நிர்ணயிக்கப்படும் என்று ஏற்கெனவே சொன்னேன். நமது ராஜ்யத்தில் அதிகப்பட்ச விலை இந்த மாதம் 2-ம் தேதியிலிருந்து தான் அமுலுக்கு வந்திருக்கிறது. ஒருசில நாட்கள் வரை இந்தக் கோளாறுகள் இருக்கலாம். இந்தக் கோளாறுகள் மிகைப்படுத்தப்படுகின்றன என்று தான் நான் நினைக்கிறேன்.

**SRI K. B. S. MANI** : தென் மண்டலத்திலுள்ள மற்ற ராஜ்ய அரசாங்கங்கள், தங்களுடைய பற்றுக்குறையை சரிப்படுத்துவதற்காக நம்முடைய அதிகப்பட்ச விலையைவிட அதிகமாக தங்கள் ராஜ்யங்களில் அதிகப் பட்ச விலையை நிர்ணயித்துவிட்டால், அப்போது நமது வியாபாரிகளும் விவசாயிகளும் பாதிக்கப்படுவார்கள். நமது ராஜ்ய வியாபாரிகளும் விவசாயிகளும் அவ்வாறு பாதிக்கப்படக்கூடிய காலத்தில் அவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்க நமது அரசாங்கம் எதாவது ஏற்பாடு செய்திருக்கிறதா ?

**MR. SPEAKER** : இது ஒரு " ஹைபாதெடிகல் " கேள்வியாக இருக்கிறது. இதற்கு கனம் அமைச்சர் பதிலளிக்கப்போகிறாரா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : இதற்கு பதிலளிக்கிறேன். கேரள் அரசாங்கத்தில் நிர்ணயிக்கப்படும் அதிகப்பட்ச விலை நமது ராஜ்யத்தின் அதிகப்பட்ச விலையை ஒட்டியிருக்கும். அந்த அதிகப் பட்ச விலையையும் கேரள அரசாங்கம் இன்னும் நிர்ணயிக்கவில்லை. அதை மத்திய அரசாங்கம்தான் நிர்ணயிக்கிறது.

*The Ashok Mehta Foodgrains Enquiry Committee*

* 166 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Ashok Mehta Foodgrains Enquiry Committee has recommended in its report the building up of buffer stocks by internal purchases and imports to check the rise in the prices of foodgrains; and

(*b*) if so, the steps taken by the Government on the above recommendations of the Committee?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes.

(*b*) The Government of India are builidng up a Central reserve by making internal procurement and by import. This Government have also decided to procure 2 lakhs of tons of rice from the ensuing harvest this year.

SRI N. K. PALANISAMI : "பப்பர் ஸ்டாக்" வைத்துக் கொள்வதன் நோக்கம், பொருளின் விலை உயரக்கூடிய காலத்தில் அதை ஓரளவு குறையச் செய்வதற்கு இந்த ஸ்டாக் உதவும் என்பதுதான். அந்த அடிப்படையில் பார்த்தால், விலை உயர்வு காலத்தில் மாநிலத்தில் எல்லா இடங்களிலும் நியாய விலைக் கடைகளை வைத்து மக்களுக்கு உணவு தானியங்களை நியாய விலையில் கிடைக்கச் செய்யவேண்டும். சர்க்காரிடம் அப்படிப்பட்ட திட்டம் ஏதாவது இருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது சம்பந்தமாக நான் முன்பே சொன்னேன் ; முதலில் அரிசியைக் கொள்முதல் செய்ய வேண்டும் ; அப்படி இல்லாவிட்டால் நெல்லை வாங்கி அதை அரிசியாக்க வேண்டும் ; அதற்குப் பிறகு, அவசியமான அளவிற்கு நியாய விலைக் கடைகளை அமைக்கவேண்டும்.

SRI M. KALYANASUNDARAM : இந்த நாட்டில் இறக்குமதி செய்யப்படும் தானியத்திலிருந்து எவ்வளவு தானியம் நமது ராஜ்யத்திற்கு ஒதுக்கப்படும் என்பதை கனம் அமைச்சர் தெரிவிப்பாரா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இறக்குமதி செய்யப்படும் தானியத்திலிருந்து நமது ராஜ்யத்திற்குப் பங்கு தேவையில்லை. நமது ராஜ்யத்திற்குப் போதுமான உணவு தானியம் இந்த ராஜ்யத்திலேயே உற்பத்தியாகிறது. ஆனால், சென்னைக்கு ஆந்திராவிலிருந்து மட்டும் முக்கியமாக நெல்லூர் அரிசி வந்து கொண்டிருக்கிறது. இந்த மாதம் முதல் தேதியிலிருந்து அது கொஞ்சம் நின்றிருக்கிறது. ஏதோ, கொஞ்சம் அதிக விலை கிடைக்குமா என்று அவர்கள் எதிர்பார்க்கிறார்கள். இந்த நிலைமையும் விரைவில் மாறிவிடும் என்று எதிர்பார்க்கிறேன்.

MR. SPEAKER : Questions 167 and 197 may be taken up together as they relate to the same subject.

*Cost of living*

* 167 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the steps recommended by this Government to the Central Government to bring down the cost of living; and

(*b*) the steps this Government took to bring down the prices?

10th February 1959]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) This Government have not recommended to the Government of India any special steps to bring down the cost of living;

(*b*) The cost of living is dependent not only on the prices of foodgrains but also on other factors. So far as prices of foodgrains are concerned, the National Development Council has decided that wholesale trading in foodgrains should be taken over by the State Governments. The Government of India are working out the details of the scheme and this Government will take necessary steps to implement the scheme on its receipt. Meanwhile this Government have decided to procure tentatively 2 lakhs tons of rice from the ensuing harvest for distribution through fair price shops. It has also been decided to fix controlled prices for paddy and rice at wholesale level. As the prices of other agricultural commodities normally centre round the prices of paddy and rice, it may be expected that with the control of the prices of paddy and rice, the prices of other commodities will also be held down.

*Cost of living index*

* 197 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the present cost of living index;

(*b*) the trend in the cost of living;

(*c*) the commodities that are mainly responsible for the rise or fall and the reasons therefor; and

(*d*) whether the availability of these indicate a further rise in the course of the next year or a fall in the cost of living index?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The cost of living index for December 1958 is 430.

(*b*) The trend in the cost of living index is upward, i.e., the cost of living index increased from 100 in 1939 to 351 in 1953 except for a decline in 1955 to 321 and it again rose to 430 in December 1958.

(*c*) Rice, dhal, meat, coconut, chillies, gingelly and firewood have contributed principally to the increase in the index, due to the rise in their prices.

(*d*) With the commencement of harvests and large arrivals of new crop the price of rice is expected to fall and consequently, the cost of living index is also expected to fall to some extent.

SRI K. SATTANATHA KARAYALAR : உணவு தானியங்களின் விலையேற்றத்தால் மட்டுமன்றி இதர பொருள்களின் விலையேற்றத்தாலும் வாழ்க்கைச் செலவுப் புள்ளி உயர்ந்திருக்கிறது என்று கனம் அமைச்சர் சொன்னார். விலையேறியுள்ள இதர பொருள்களுக்கும் விலைக் கட்டுப்பாடு கொண்டுவந்து விலைவாசி உயர்வதைத் தடுக்க நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதற்கு தனிக் கேள்வி போட்டால் பதில் சொல்லுகிறேன்.

[10th February 1959

Sri K. PONNIAN : இவ்வாறு வாழ்க்கை செலவுப் புள்ளி உயரும் காலத்தில் ஊழியர்களுக்கு, டியர்னஸ் அலவன்ஸுடன் வாழ்க் கைச் செலவுப் புள்ளி உயர்வுக்கு என்று ஓரளவு தொகையைச் சேர்த்துக் கொடுப்பதற்கு வகை செய்யும் சட்டம் இருக்கிறதா ? அப்படியானல் ஊழியர்களுக்கு அவ்வாறு அலவன்ஸ் கொடுத்துக் கொண்டிருக்கிறர் களா ?

Mr. SPEAKER : ' யார் ' கொடுத்துக் கொண்டிருக்கிறர்களா என்று கேட்கிறீர்கள் ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் இதை என் சகா கனம் தொழில் அமைச்சரிடம் கேட்டால் அவர் பதில் அளிப்பார்.

Sri M. KALYANASUNDARAM : விலை ஏறக்கூடிய இன்னும் சில முக்கியமான பொருள்கள் விறகும் அடுப்புக் கரியும் ஆகும். அவை களின் விலைகளைக் குறைக்க சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக் கிறர்கள் ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் கூறியது உண்மைதான். விறகின் விலை உயர்வைத் தடுப்பதற்கு விறகுகள் அதிகம் கிடைக்கச் செய்யவேண்டும். இதற்காக, கிராமக் காடுகளிலும் மற்ற இடங்களிலும் விறகுக்கு வேண்டிய மரங்கள் வளர்க்கப் படுகின்றன. மேலும், நெய்வேலித் திட்டம் நடக்க ஆரம்பித்து விட்டால் விறகுச் செலவை (விறகின் உபயோகத்தை) ஓரளவு குறைக்கலாம்

Sri A. GOVINDASAMY : விலைவாசிகள் உயர்விற்குக் காரண ஸ்தர்களாக இருப்பவர்கள் பதுக்கல்காரர்கள்தான் என்பது தெரிந்திருந்தும், பதுக்கல்காரர்களைக் கண்டு பிடிப்பதற்கு அரசாங்கம் இதுவரையில் நடவடிக்கை எடுக்காததற்குக் காரணம் என்ன ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : பதுக்கல் அதிகமாக இருக்கிறது. விலைவாசிகள் உயர்விற்கு அது தான் காரணம் என்று அரசாங்கம் கருதவில்லை. பதுக்கல்காரர்கள் சம்பந்தமாக கனம் அங்கத் தினரிடம் தகவல் இருந்தால் அதை நான் வரவேற்கிறேன். அவர் தகவல் கொடுத்தால், வேண்டிய நடவடிக்கைகளை எடுக்கலாம்.

Sri A. A. RASHEED : What was the cost of living index figure in December 1957 ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : I am sorry, Sir, I don't have that figure with me now.

Sri M. KALYANASUNDARAM : சற்று முன்பு கனம் அமைச்சர் நெய்வேலித் திட்டத்தைப் பற்றிக் குறிப்பிட்டார். சென்னை நகரத்திற்கு " காஸ் " ஸப்ளை செய்யக்கூடிய திட்டம் சர்க்காரின் ஆலோசனையில் இருக் கிறதா ? அது மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது ஆலோசனைக்கு எடுத்துக்கொள்ளப்படுமா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : அம்மாதிரியான திட்டம் இப்போது அரசாங்கத்தின் ஆலோசனையில் இல்லை. ' ப்ரிகெட்ஸ் ' சம்பந்தமாக நெய்வேலித் திட்டத்தைக் குறிப்பிட்டேன். ' ப்ரிகெட்ஸ் '-ன் தேவை அதிகமாக இருக்கிறது. அதிகமாக மின்சாரம் உபயோகிக்கும் நாடுகளில் கூட ' ப்ரிகெட்ஸ் ' அதிகமாகத் தேவைப்படுகின்றன. நெய்வேலித் திட்டம் நடக்க ஆரம்பித்தால் நமக்கு ' ப்ரிகெட்ஸ் ' அதிகமாகக் கிடைக்கும் என்றுதான் நான் சொன்னேன்.

10th February 1959]

*" Maniyamkaram "*

* 169 *Q.*—Sri K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether " maniyamkaram " is collected still in the Kanyakumari district; and

(*b*) if so, what is the agency that collects it?

The Hon. Sri M. A. MANICKAVELU : (*a*) Yes Sir.

(*b*) The Sanketham staff working under the Collector of Trivandrum is the agency by which the maniyamkaram dues are being collected. Arrears of maniyamkaram being recoverable as arrears of land revenue under the Travancore-Cochin Revenue Recovery Act, 1951. This Government have agreed to collect them in cases where the application of coercive processes under that Act is necessary for such collection.

Sri T. T. DANIEL : Sir, is it not a fact that at present, our Government have issued a stay order to the Collectors to stay the recovery of maniyamkaram?

The Hon. Sri M. A. MANICKAVELU : Yes, Sir. That is so.

Sri K. SATTANATHA KARAYALAR : இதுபோன்று மனியக்கரம் கேரள பகுதிகளில் வசூலிக்கப்படுகிறது. அதை நிறுத்துவதற்கு அவர்கள் ஒரு மசோதா சமீப காலத்தில் பிரசுரம் செய்திருப்பது சர்க்கார் கவனத்திற்கு வந்ததா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : நம் அரசாங்கத்தைப் பொறுத்த மட்டில் சில நில சொந்தக்காரர்கள் இது பற்றி முறையிட்டார்கள். அதை பரிசிலனை செய்து அங்கிருந்து கலெக்டர் ரிப்போர்ட் அனுப்பியிருக்கிறார். அதையெல்லாம் பரிசிலனை செய்து இதை மாற்றியமைக்க முடியுமா என்று ஆராய்ந்து கொண்டிருக்கிறோம்.

Sri K. VINAYAKAM : Sir what exactly is this ' maniyamkaram '? What is its connotation in Madras Revenue parlance?

Mr. SPEAKER : I think the Hon. Member must put a separate question and give notice.

Sri T. S. RAMASWAMY PILLAI : Sir, may I know whether the Government are aware of the fact that the Kerala Government are bringing forward a Bill to abolish this maniyamkaram tax?

The Hon. Sri M. A. MANICKAVELU : I am not aware of what the Kerala Government are doing. As far as our Government are concerned, certain representations were made, and they are being examined in the light of the report of the Collector.

[10th February 1959

*Sales-tax on milk*

* 170 *Q.*—Sri K. SATTANATHA KARAYALAR : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) ராஜ்ய பால் உற்பத்தியாளர் யூனியனிடமிருந்தும், இதர பால் உற்பத்தியாளர்களிடமிருந்தும் பால் விற்பனைக்கு வரி எடுபட வேண்டுமென்று கோரி சமீபத்தில் வேண்டுகோள் வந்ததா ?

(ஆ) அப்படியானால் அதன்மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

The Hon. Sri R. VENKATARAMAN : ( அ ) No such representation has been received recently.

( ஆ ) Does not arise.

Sri A. GOVINDASAMY : காங்கிரஸ் ஆட்சி வந்தால் பாலும் தேனுமாக ஓடுமென்று சொன்னார்கள். ஆகவே பாலுக்காவது வரியைக் குறைக்க அரசாங்கம் நடவடிக்கைகள் எடுக்குமா ?

The Hon. Sri R. VENKATARAMAN : காங்கிரஸ் அரசாங்கத்தில் வரி போட்டாலும் பாலும் ஓடும், தேனும் ஓடும்.

*House-sites for Harijans*

* 171 *Q.*—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Public Works be pleased to state the steps taken by the Government to assign house-sites to Harijans in Erode taluk, Coimbatore district?

The Hon. Sri P. KAKKAN : Under a rehabilitation scheme for relief of seepage-affected areas under the Bhavani Project, acquisition of house-sites was made in 57 cases in Erode taluk in Coimbatore district. Construction of colonies is in progress in 9 cases. In the other cases, steps are being taken to rehabilitate the Harijans.

Sri N. K. PALANISAMI : ஹரிஜனங்களுக்கு மனைகள் கட்ட இடங்கள் கோரி சுமார் ஆயிரம் விண்ணப்பங்களுக்கு மேல் வந்திருந்தும் இதுவரையில் நடவடிக்கைகள் எடுக்கப்படவில்லை. ஆகவே உடனடியாக வீடுகள் கட்ட இடம் கொடுப்பதற்கான உத்திரவை சர்க்கார் சீக்கிரம் போடுமா ?

The Hon. Sri P. KAKKAN : நான் சொன்ன பதிலில் 57 கேஸ்களில் நடவடிக்கைகள் எடுத்திருக்கிறார்கள் என்று கூறினேன். நான் சுற்றுப் பிரயாணம் செய்தபோது கலெக்டரிடம் சொல்லி பவானி ப்ராஜெக்ட் ஏரியாவில் ஹரிஜனங்களுக்கு மனைகட்டுகள் வழங்க துரிதமாக நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்றும், ஒதுக்கப்பட்டிருக்கும் பணத்தை மிச்சப் படுத்தக்கூடாதென்றும் சொல்லியிருக்கிறேன்.

Sri M. K. SOMASUNDARAM : ஈரோடு தாலுகாவில் மொத்தம் எத்தனை பேர்களுக்கு மனைக்கட்டுகள் வழங்க வேண்டுமென்று கணக்கெடுத்திருக்கிறார்கள் ? எத்தனை பேர்களுக்கு வழங்கப்பட்டிருக்கிறது ? இன்னும் எத்தனை பேர்களுக்கு வழங்கப்படும் ?

The Hon. Sri P. KAKKAN : தனிக் கேள்வி வேண்டும்.

Sri P. G. MANICKAM : லோயர் பவானி வாய்க்கால் நீர் கசிவால் சேதமடைந்த வீடுகளைக் கட்டுவதற்காக ஒதுக்கப்பட்ட தொகையில் மிச்சம் இருக்கிறதா, அல்லது எல்லாம் செலவழிக்கப்பட்டு விட்டதா ?

The Hon. Sri P. KAKKAN : தனிக் கேள்வி வேண்டும்.

10th February 1959]

*Facilities for Marakanam fishermen*

* 172 *Q*.—Sri M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Local Administration be pleased to state the various facilities provided for the fishermen near Marakanam Sea Coast in Tindivanam taluk in South Arcot district?

The Hon. Srimathi LOURDHAMMAL SIMON : Four Fishermen Co-operative Societies have been set up in the Marakanam Coastal area, one each at (i) Kaipanikuppam, (ii) Anamandaikuppam, (iii) Koonimedukuppam and (iv) Mudaliar Chavadikuppam. The main purpose in the formation of these societies is to provide the members with loan finance for purchase of fishery requisites. Long-term loans to the extent of about Rs. 25,000 have been distributed to the fishermen in 1958 through two of these societies for purchase of fishing implements. During 1957–58, yarn worth Rs. 10,000 was distributed to the fishermen through the four societies at 50 per cent of the cost. The society at Koonimedu has been granted Rs. 4,000 partly as loan and partly as subsidy, for the construction of a fish-curing yard-*cum*-godown.

**Sri A. GOVINDASAMY** : இந்த பகுதியில் மீன் பிடிப்பவர்களுக்கு பாப்லோ போட்களும், நைலான் வலைகளும் வழங்கப்பட்டிருக்கிறதா ?

**The Hon. Srimathi LOURDHAMMAL SIMON** : இது வரையில் இது கொடுக்கவில்லை.

**Mr. SPEAKER** : 173-வது கேள்வியையும், 192-வது கேள்வியையும் ஒன்றுசேர்த்து எடுத்துக்கொள்ளலாம். ஸ்ரீ பழனிசுவாமி, ஸ்ரீ கரயாளர், ஸ்ரீ சம்பத், ஸ்ரீ ரஷீத், ஸ்ரீ லாஸர் இந்த ஐந்து பேர்களும் கேட்டிருக்கிறார்கள்.

*Yellow journalism*

* 173 *Q*.—Sri N. K. PALANISAMI :
Sri K. SATTANATHA KARAYALAR :
Sri T. SAMPATH :
Sri A. A. RASHEED :
} Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether there is any proposal to bring in legislation to curb yellow journalism in this State; and

(*b*) if so, the stage at which the matter now stands?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) The Government are examining proposals to amend the relevant provisions of the Indian Penal Code so as to cover publication of indecent or scurrilous matter or matter intended for blackmail.

(*b*) A draft Bill is being prepared and the Bill will be introduced in the Legislature in due course after it is finalised.

[10th February 1959

*Yellow Journals*

* 192 *Q.*—Sri S. LAZAR : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether the Government are aware of the obscene and slanderous journals published and sold in public in the State; and

(*b*) if so, the steps taken against the publication of such journals?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) A few "Yellow" journals disseminating obscene and scurrilous matter among the public in the State have been brought to the notice of the Government.

(*b*) To curb such journals, the Government have, whenever occasion demanded it, launched prosecutions under Section 292, Indian Penal Code, against the persons responsible for such publications. The Government are also examining proposals to amend the relevant provisions of the Indian Penal Code so as to cover publication of indecent or scurrilous matter, or matter intended for blackmail.

Sri A. A. RASHEED : Sir, is the Hon. Minister aware that the number of these journals has increased recently?

The Hon. Sri C. SUBRAMANIAM : I am not in touch with these journals (laughter). Perhaps it may be so.

Mr. SPEAKER : I will give chance to put supplementaries to those who have given notice of questions. If there is time, I will give chance to others also. Sri Lazar will now put his supplementary.

Sri N. K. PALANISAMI : சர்க்கார், இந்த மாதிரியுள்ள " எல்லோ ஜர்ணல்களை "-யும் தடை செய்ய ஒரு மசோதா கொண்டு வர நாலைந்து வருடங்களுக்கு முன்பாகவே ஒரு ஏற்பாடு செய்தார்கள். இதுவரையில் அதை ஏன் கொண்டுவரவில்லை? தாமதத்திற்கு காரணம் என்ன?

The Hon. Sri C. SUBRAMANIAM : இதற்கு முன்னால், " பிரஸ் (அப்ஜக்ஷனபிள் மாட்டர்ஸ்) ஆக்ட் " என்ற சட்டம் இருந்தது. அந்தச் சட்டம் இருக்கிற வரையில் அதன் கீழ் நடவடிக்கைகள் எடுக்க முடிந்தது. இப்பொழுது அந்தச் சட்டம் அமுலில் இல்லை. இப்பொழுது நாமே ஒரு தனிச்சட்டம் நம் ராஜ்யத்திற்கு ஏற்படுத்த வேண்டுமென்ற முறையில் ஒரு சட்டம் தயாரித்துக் கொண்டிருக்கிறோம், ஐ.பி.ஸி. யைத் திருத்துவதற்கும் கூடிய சீக்கிரம் சட்டம் கொண்டுவரப்படும்.

Sri S. LAZAR : " அப்சீன் " படங்களையுடைய புத்தகங்கள் எல்லாயிடங்களிலும் பகிரங்கமாக விற்கப்படுகிறது. இவைகளை தடுப்பதற்கான சட்டம் வருவதற்கு சிறிது தாமதம் ஏற்பட்டாலும் இதுபோன்று பகிரங்கமாக விற்பதைத்தடுக்க உடனடியாக ஏதாவது நடவடிக்கைகள் எடுக்க சர்க்கார் முன்வருமா?

The Hon. Sri C. SUBRAMANIAM : வெறும் நடவடிக்கைகள் எடுப்பது முடியாத காரியம். சட்டத்திற்கு உட்பட்டுத்தான் நடவடிக்கைகள் எடுக்கவேண்டும். இப்பொழுதுள்ள சட்டத்தில் அந்த அதிகாரம் இல்லாததால் அந்தச் சட்டத்தை திருத்தவேண்டுமென்று நடவடிக்கைகள் எடுக்கப் பட்டு வருகின்றன.

10th February 1959]

SRI A. VEDARATHNAM : இந்நாட்டிலுள்ள பத்திரிகைகளில் வருகிற செய்திகளை எல்லாம் உண்மையென்று நம்புகிற பழக்கம் ஜனங்களிடத்திலே இருக்கிறது. அந்நிலையில் அநேகம் பத்திரிகைகள் உண்மைக்கு மாறான செய்திகளை பிரசுரிக்கின்றன. சட்ட சபையில் நடந்த விஷயங்களைக்கூட நடந்ததற்கு மாறாக பிரசுரம் செய்ததின் மேல், அதிகாரம் இருந்ததால் அதன் மேல் நடவடிக்கைகள் எடுக்க முடிந்தது. அதேபோன்று வெளியிலுள்ள காரியங்களை உண்மைக்கு மாறான விதத்தில் பிரசுரித்தால் வரப்போகிற சட்டத்தில் அவைகளின் பேரில் நடவடிக்கைகள் எடுக்க அரசாங்கம் வகை செய்யுமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : உண்மைக்கு மாறுபட்ட செய்திகள் எல்லாவற்றின் மீதும் நடவடிக்கைகள் எடுப்பது என்பது முடியாத காரியம். ஆபாச பிரசுரங்கள், மக்களின் ஒழுக்கத்தைக் கெடுக்கும் பிரசுரங்களைத் தடுப்பதற்கு நடவடிக்கைகள் எடுக்க இப்பொழுது சட்டம் திருத்தப்படுகிறது. உண்மைக்கு மாறாக இருந்தால் அந்த உண்மை வெளிப்பட்டுவிடும். மக்கள் உணர்ந்து கொள்வார்கள். எந்தெந்த பத்திரிகைகள் உண்மையான செய்திகளைப் பரப்புகின்றன? எந்த பத்திரிகைகள் பொய் செய்திகளை பரப்புகின்றன என்று மக்களுக்கு இப்பொழுது தெரிந்திருக்கிறது என்று நம்புகிறேன்.

SRI V. K. KRISHNAMURTHY : தலைவர் அவர்களே, கூடா ஒழுக்கத்தை அடிப்படையாகக்கொண்டு, கூடா ஒழுக்கத்தை கைக்கொண்டிருக்கும் நூல்கள் அத்தனையும் தடை செய்வதற்கு அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : "அப்ஜெக்ஷனபில் மாட்டர்" என்று சொல்லும்பொழுது புத்தகங்களும் வரும், பத்திரிகைகளும் வரும், சுவர் ஒட்டிகளும் வரும், படங்களும் வரும். எல்லாமே அதற்குள்ளாக வரும்.

*Report of the Agricultural Administration Committee*

* 174 Q.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) whether the Agricultural Administration Committee's (Nalagarh Committee) report was examined by this Government;

(b) if so, what are the recommendations that are to be implemented by this Government; and

(c) what are the recommendations that are not possible to be implemented and why?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) The recommendations contained in the Report of the Committee are under examination of the Government.

(b) & (c) Since the recommendations are still under examination it will not be possible to give the details, till the final decisions are taken.

SRI K. SATTANATHA KARAYALAR : இதிலே முடிவு எடுப்பதற்கு இன்னும் எத்தனை காலம் ஆகும் என்பதைச் சொல்லமுடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஒவ்வொன்றாக முடிவு செய்யப்பட்டு வருகிறது.

[10th February 1959

* 175 *Q.*—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Agricultural Administration Committee constituted by the Government of India under Raja Surendra Singh Nalagarh in 1958 has recommended that both Agricultural and Irrigation Departments should be under one Minister; and

(*b*) if so, the steps taken by the Government to implement the above recommendation?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) Yes.

(*b*) The matter is under examination.

* 176 *Q.*—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Agricultural Administration Committee constituted by the Government of India under Raja Surendra Singh Nalagarh during 1958 has recommended that the State should not depend upon the Centre for taking action on the subjects which are the responsibility of the States; and

(*b*) if so, the steps taken by the Government in the matter?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) The answer is in the affirmative.

(*b*) This recommendation, along with other recommendations of the Committee, are under consideration of the Government.

Sri N. K. PALANISAMI : இப்பொழுது அகில இந்தியாவுக்கும் ஒரு பாலிஸி அடிப்படையிலே ஒவ்வொரு ஸ்டேட்டும் விவசாயத்தை அபிவிருத்தி செய்வது என்ற தீர்மானத்திற்குப் பதிலாக, ஒரு ஸ்டேட், ஒரு டிஸ்டிரிக்ட், ஒரு தாலூகா என்பதற்கு பதிலாக, ஒவ்வொரு கிராமத்தின் அடிப்படையிலே இருக்கவேண்டும் என்று இந்தக் கமிட்டி சிபார்சு செய்திருக்கிறதா? அந்த அடிப்படையிலே எதாவது நடவடிக்கை எடுக்கப்படுமா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : இதுபற்றி எல்லாம் எந்த அளவுக்கு சாத்தியம் என்பது பரிசீலனை செய்யப்பட்டு தான்வருகிறது.

*General Hospital, Pudukkottai*

* 177 *Q.*—Sri V. ARUNACHALA THEVAR : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) when the General Hospital at Pudukkottai town was repaired last;

(*b*) whether the Hon. the Minister was in receipt of complaints from the public of Pudukkottai about the same;

(*c*) what action the Government have taken to repair it now; and

(*d*) when the Government propose to construct the T.B. Ward at the said hospital?

The Hon. Sri M. A. MANICKAVELU : (*a*) In March 1957.

(*b*) No, Sir.

10th February 1959]

(*c*) Estimates for further repairs to the hospital building have been prepared.

(*d*) The work will be taken up for execution as soon as the detailed plans and estimates now under preparation are scrutnised by the competent Public Works Department authorities.

Sri V. ARUNACHALA THEVAR : சமஸ்தான சர்க்கார் டி.பி. வார்டு கடடுவதற்காக எத்தனை ஆயிரம் ரூபாய் வசூல் செய்து வைத்திருந்தார்கள் ?

The Hon. Sri M. A. MANICKAVELU : என்னிடம் இருக்கும் தகவல்படி அந்தப் பணம் பொது மக்களிடத்திலிருந்து வசூல் செய்யப் பட்ட பணம் என்று தெரியவருகிறது. சுமார் ரூ. 85,000 இருக்கிறது. 24 படுக்கை அடங்கிய ஒரு வார்டு கட்டுவதற்காக பிளானெல்லாம் தயாரிக்கப்பட்டு வருகிறது.

Sri V. ARUNACHALA THEVAR : புதுக்கோட்டை ஆஸ்பத்திரியில் எத்தனை படுக்கைகள் வைக்கப்பட்டிருக்கின்றன ?

The Hon. Sri M. A. MANICKAVELU : அனுமதிக்கப்பட்ட படுக்கைகளின் எண்ணிக்கை 96. ஆனால் எண்ணிக்கைகக்கு மேற்பட்டே அங்கே நோயாளிகள் இருக்கிறார்கள்.

*Andhra-Madras border dispute*

* 178 *Q*.—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Chief Minister be pleased to state whether any compensation is to be paid to the Andhra State in connection with the settlement of Andhra-Madras border dispute?

The Hon. Sri C. SUBRAMANIAM : No, Sir.

* 179 *Q*.—Sri K. VINAYAKAM : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether the Government are in receipt of a draft Bill from the Central Government regarding the adjustment of boundary between Madras and Andhra States based on Pataskar's award;

(*b*) the salient features of the draft Bill; and

(*c*) whether the Government have submitted their remarks to the Central Government on the above Bill?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) *to* (*c*) Only a preliminary draft Bill was received from the Government of India and this Government have accepted it subject to some slight modifications. The Government of India will finalize the Bill after considering the comments made by this Government. When the Bill is formally referred to the State Government under Article 3 of the Constitution, it will be placed before both the Houses of the State Legislature.

Sri K. VINAYAKAM : இங்கு அனுப்பப்பட்ட நகல் மசோதாவின்பேரில் இந்த ராஜ்ய சர்க்கார் தங்களுடைய அபிப்பிராயத்தை சொன்ன பிறகு, பிப்ரவரி 15-ம் தேதிக்குள் ராஜ்ய சர்க்கார் அசெம்பளியில் இதை

[10th February 1959

பாஸ் செய்து அனுப்பவேண்டும் என்று ஏதாவது நிபந்தனை தெரிவிக்கப் பட்டதா? ஏப்ரல் முதல் தேதிக்குள்ளாக இதெல்லாம் சரிசெய்யப்பட்டு இது அமுலுக்கு வரவேண்டுமென்ற யோசனையும் சொல்லப்பட்டதா?

THE HON. SRI C. SUBRAMANIAM: ஏப்ரல் முதல் தேதிக்குள் அமுலுக்கு வரவேண்டுமென்றுதான் இந்த ராஜ்ய சர்க்காரும் சொல்லி யிருக்கிறார்கள். பிப்ரவரி 15-ஆம் தேதிக்குள் இங்கு கொண்டு வரமுடியு மானால் சௌகரியமாக இருக்கும் என்று இந்த அரசாங்கம் தெரிவித்திருக் கிறது. ஆனால் மசோதா இன்னும் வந்து சேரவில்லை.

SRI K. VINAYAKAM: கூடிய சீக்கிரம் அந்த மசோதா நமக்கு வரும்படி செய்வதற்கு நம்முடைய சர்க்கார் மத்திய சர்க்காருக்கு மறு படியும் எழுதி, தகவல் கேட்க முடியுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: அதுபற்றி அவர்களுக்கு அவ்வப்பொழுது எழுதிக்கொண்டிருக்கிறோம். கூடிய சீக்கிரம் அவர்களும் பரிசீலனை செய்து அனுப்புவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

### *Seed farms*

* 180 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR: Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the area of seed farms in Tirunelveli district and Kanyakumari district;

(*b*) the extent of wet and dry lands; and

(*c*) the lease amount paid per acre of dry lands and wet lands in the different seed farms of these districts?

THE HON. SRI M. BHAKTAVATSALAM:

(*a*) (1) Tirunelveli district—164.83 acres.

(2) Kanyakumari district—32.00 acres.

(*b*) & (*c*) The entire extents in the two districts are wet lands.

The lease amounts paid are as below:—

| Name of seed farm. | Lease amount per acre. |
|---|---|
| (1) Tirunelveli district— | |
| Karaiyiruppu farm .. .. .. | 600 |
| Vasudevanallur farm .. .. .. | 300 |
| Illangi farm .. .. .. | 300 |
| (2) Kanyakumari district— | |
| Thirupathisaram farm .. .. | The lands are Government lands. The question of lease amount does not arise. |

[Sri R. Venkataraman] [10th February 1959

have been met to a large extent by the introduction of slab rates for small dealers who form 50 to 60 per cent of the dealers assessed to tax and the extension of single-point levy to a large number of items.

The pattern of the Bill is calculated to give relief to small dealers, to reduce the inconvenience to traders in general in filing returns, appeals, etc., and getting legitimate relief and to protect the interests of honest traders by plugging evasions and suppressions.

Before I conclude, I wish to record my thanks to the members of the Select Committee for the excellent co-operation they gave me. But for the extraordinary diligence they showed, it would have been very difficult to bring about a measure of agreement in regard to the Bill, which has now been made possible. I now request the House that the Bill, as amended by the Select Committee, be taken into consideration.

MR. SPEAKER : Motion moved.

"That the Madras General Sales Tax Bill, 1958 (L.A. Bill No. 6 of 1958), as amended by the Select Committee, be taken into consideration".

10–40 a.m. MR. SPEAKER : Now, there will be general discussion for two days, i.e., to-day and tomorrow. I request the hon. Members who wish to participate in the discussion to speak for not more than 15 minutes.

SRI M. KALYANASUNDARAM : Sir, time may be given till tomorrow for the sending of amendments.

MR. SPEAKER : Even yesterday, I have announced the latest time by which amendments will have to be sent. I am sorry the hon. Member was absent yesterday. I suppose his party-men would have told him about it; anyway, he can ascertain the exact time within which amendments are to be sent, from his party Members. I have already announced the time.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Mr. Speaker, I request the Hon. Minister through you, to arrange to circulate copies of his speech to all the hon. Members of this House before this evening.

THE HON. SRI R. VENKATARAMAN : I shall try to do so, Sir.

*SRI K. RAMACHANDRAN : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த விற்பனை வரி மசோதாவைப் பொறுத்தவரை, இந்த மசோதாவைப் பற்றி ஆரம்பத்தில் பேசுகிற காலத்தில் இதை ஒரு "comprehensive and simplified" சட்டமாகக் கொண்டுவரவேண்டுமென்ற குறிப்பை மந்திரி அவர்கள் கொடுத்திருக்கிறார்கள். இந்த விற்பனை வரியைப் பொறுத்தவரை என்னென்ன கஷ்டங்கள் சொல்லப்பட்டு வந்தன, என்பதை எல்லாம் பரிசீலித்து பொதுமக்கள், வியாபாரிகள் ஆகியவர்களின்

10th February 1959] [Sri K. Ramachandran]

கோணங்களில் இருந்தெல்லாம் ஆலோசனை செய்து பார்த்து இந்தச் சட்டத்தைக் கொண்டு வரவேண்டுமென்று எதிர்பார்த்துக்கொண்டிருந் தோம். டாக்டர் பி. எஸ். லோகநாதன் அவர்களை இதைப்பற்றியெல்லாம் விசாரிக்கப்போட்டிருந்தார்கள். அதற்குப் பின் இந்தச் சட்டமானது வெகு நாட்களுக்குப் பின் வந்திருக்கிறது. இப்பொழுது இது "சிம்ப்ளிபைடு" லெஜிஸ்லேஷனாக இருக்கிறதா (SRI R. SUBRAMANIAM in the chair) மந்திரி அவர்களின் குறிக்கோள் நிறைவேற்றப்பட்டிருக்கிறதா என்று பார்த்தால் இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். பொதுவாக விற்பனை வரியைப் பொறுத்தவரை ஒரு முனை விற்பனை வரி என்பது வற்புறுத்தப்பட்டு வந்தது. ஏன் அப்படி ஒரு முனையில் விதிக்க வேண்டும் என்று நான் விரிவாகச் சொல்ல வேண்டுமென்பது அவசியம் இல்லை. அதுதான் "simplified" என்பதற்குப் பொருள். கொடுக்கும் வரியை ஒரு முனையில் விதிப்பதால் பல கட்ட விற்பனை - வரியினால் ஏற்படும் சிரமமான நிலைமைகள் ஏற்படாமல் இருக்கும் என்பதற்காகத்தான் இதை வலியுறுத்தி வந்தோம். பொதுவாக இந்த விற்பனை வரியைப் பொறுத்த வரை சிறிய வியாபாரிகளுக்குத்தான் அதிகத் தொந்தரவு இருக்கிறது. அதைப் பார்க்கும்போது இப்பொழுது வந்திருக்கும் சட்டத்தின்படி 10 ஆயிரம் வரை "டர்ன் ஓவர்" உள்ளவர்களுக்குத்தான் இதிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது என்பதைப் பார்க்கும்போது அது அவ்வளவு பெரிய விஷயம் என் சொல்லிக்கொள்ள முடியாது. 10 ஆயிரம் "டர்ன் ஓவர்" என்று சொல்லும்போது ஒரு மாதத்திற்கு 230 ரூபாய் ஒரு நாளைக்கு 25, 30 வரை வியாபாரம் செய்யும் வியாபாரிக்கு பாதகம் ஏற்படக்கூடிய நிலையில் இந்த விற்பனை வரி வந்திருக்கிறது. ஏற்கனவே இருந்ததை விட இப்பொழுது ஓரளவுக்கு நல்ல விதத்தில் இருக்கிறது என்றாலும் இன்று இருக்கும் நிலையை எடுத்துக்கொண்டு பார்த்தால் ஒரு நாளைக்கு 25, 30 வரை வியாபாரம் செய்யும் வியாபாரிக்கு சாதாரணமாக 2 அல்லது 3 ரூபாய்கள்தான் லாபம் கிடைக்கும். அவர்களுக்கு ஒரு மாதத்திற்கு 100 ரூபாய்தான் வருமானம் கிடைக்கும். இந்த அடிப் படையில் பார்த்தால் இந்த மாதிரி சிறிய வியாபாரிகளால் சாதாரணமாக கணக்குகள் வைத்துக் கொள்வது சாத்தியமா என்பதை நாம் சிந்தித்துப்பார்க்க வேண்டும். உங்கள் எல்லோருக்கும் நன்றாகத் தெரியும்—மளிகை வியாபாரிகள் ஒரு நாளைக்கு 20, 30 ரூபாய்க்கு வியாபாரம் செய்யக்கூடியவர்களாக இருந்த போதிலும் அவர்கள், காலணா, அரையணாவுக்கும்கூட சாமான்கள் விற்க வேண்டி இருக்கிறது. அவர்கள் இதற்கெல்லாம் கணக்கு வைத்துக் கொள்வது என்பது சாத்தியமான காரியமா என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும். எனவே 10 ஆயிரம் ரூபாய் என்று நிர்ணயித்திருப்பது குறைவு என்று நான் கருதுகிறேன். இதை ஓரளவுக்கு 20 ஆயிரம் என்று உயர்த்தி விட்டோமானால் கிட்டத்தட்ட 50 முதல் 60 ரூபாய் வரை வியாபாரம் செய்பவர்கள் மட்டும் கணக்கு வைத்தால் போதும் என்றிருக்கும். இவ்வாறு 20 ஆயிரம் என்று உயர்த்தினோமானால் வருமானம் குறைந்து விடும் என்று சொல்லலாம். ஆனால் அது சரியல்ல. ஒரு நாளைக்கு 50, 60 ரூபாய்க்கு மேல் வியாபாரம் செய்யும் வியாபாரிகளிடம் இருந்து பூரா விற்பனை வரியையும் கண்டு பிடித்து வசூலிப்பது தற்போது திறமையாக நடந்து வருகிறது என்று சொல்ல முடியாது. நான் "evasion" ஐப்பற்றித்தான் குறிப்பிடுகிறேன். இப்படிக் குறைந்த "டர்ன் ஓவர்" உள்ள வியாபாரிகளின் கணக்குகளையும் பார்க்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகின்ற காரணத்தால் பெரிய வியாபாரிகளை அதிகாரிகள் சரியாகக் கண்காணிக்க முடியாத நிலைமை ஏற்பட்டுவிடும். பொதுவாக பெரிய வியாபாரிகளிடந்தான் "tax evasion" அதிகமாக இருந்து கொண்டிருக்கிறது. அதை நிதர்சனமாகக் காண்கிறோம். அவர்கள் கணக்குகளில் மோசம் செய்வதில் இருந்து, எல்லா விதமான பிற்போக்கு வழிகளையும் கடைப்பிடிக்கிறார்கள். அவர்களுடைய கணக்குகளைப் பரிசீலிப்பதில் தொந்தரவும், அதிகாரிகளுக்குச் சங்கடம் ஏற்படும். ஆகவே 20 ஆயிரம் என்று உயருவதன் மூலம் அதிகாரிகள் பெரிய வியாபாரிகளின் கணக்குகளை நன்கு பரிசீலித்து வரி விதிப்பதின் மூலம் வருமானம் அதிகரிக்குமே தவிர குறைந்து விடாது என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

[Sri K. Ramachandran] [10th February 1959

டாக்டர் லோகநாதன் " essential articles " என்பதைப் பொருத்த வரை ½ சதவிகிதம் வரி போட வேண்டும் என்று சிபாரிசு செய்திருக்கிறார்கள். அரசாங்கம் 1 சதவிகித பலகட்ட வரி விதித்திருக்கிறது. நாம் எதிர்பார்த்தது எல்லாம் இந்த உணவு தானியங்களுக்கு வரியினின்றும் விலக்கு அளிக்கப்படவேண்டும் என்பதுதான். இந்த பலகட்ட விற்பனை வரியின் மூலம் பொதுவாக ஏழை மக்கள் பாதிக்கக்கூடிய நிலைமைதான் ஏற்படும். உணவு தானியங்கள் பாதிக்கக்கூடிய நிலைமை ஏற்படக் கூடாது என்பதற்காகத்தான் அதற்கு பல கட்ட வரியினின்றும் விதி விலக்கு அளிக்க வேண்டுமென்று கூறுகிறேன். இப்பொழுது ' multi-point tax " ஆக இருக்கிறது. ஒரு முனை வரியாக இல்லை. பக்கத்தில் உள்ள கேரளா, மைசூர் ராஜ்யங்களில் எல்லாம் உணவு தானியங்களுக்கு வரி விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. நாம் ஏன் அதைச் செய்ய முடியவில்லை என்ற விவரம் தெரியவில்லை. முக்கியமான காரணம் என்று சொல்லப்பட்டதெல்லாம் "நாம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இருக்கிறோம். நாம் வருமானத்தைப் பொறுத்துத்தான் இந்த வரி விதிப்பை விதிக்க வேண்டியிருக்கிறது." என்பதுதான். நான் வருமானத்தைக் குறைக்க வேண்டுமென்று வாதிக்கவில்லை. இப்பொழுது உள்ள சட்டத்தின்படி இந்த வரியின் மூலம் என்ன வருமானத்தை எதிர்பார்க்கிறோம். இந்த சட்டத்தின் " financial implications " என்ன என்பது தெரியுமானால் இதைப்பற்றி முடிவுக்கு வரலாம். அவ்வாறில்லாமல் வருமானம் குறைந்துவிடும் என்று கூறுவதை என்னால் ஒத்துக்கொள்ள முடியாத நிலையில் இருக்கிறேன். திரு பி. எஸ். லோகநாதன் விசாரணை செய்து கொடுத்த விவரம் என்ன? இந்த உணவு தானியங்களுக்கு வரியை நீக்கினால் அதனால் இடைக்கும் நிகர வருமானம் என்ன என்பது பற்றி, வரி விதிப்பிலிருந்து விலக்குவது பற்றி செலக்ட் கமிட்டி என்னென்ன விவரங்கள் கொடுத்தது என்பதுபற்றியெல்லாம் சரியான முறையில் தெரியாத வரையில் இதை உண்மையில் " comprehensive legislation " என்று சொல்ல முடியாது.

10-50 a.m. அடுத்தாற்போல பாலுக்கு விற்பனை வரி போடப்பட்டிருக்கிறது. அதையும் நீக்க வேண்டுமென்று பல முறை வற்புறுத்தப்பட்டு வந்திருக்கிறது. பல விண்ணப்பங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. சமீப காலத்தில் பாலினுடைய உற்பத்தியும், உபயோகமும் அதிகமாகிக்கொண்டு வருகிறது. பால் இந்த நாட்டின் குழந்தைகளின் உணவு. குழந்தைகளே நாட்டின் செல்வமாதலால், அவர்களுக்கு உணவாக இருக்கும் இந்தப் பாலுக்கு குழந்தைகளின் க்ஷேமத்தை உத்தேசித்தாவது வரி போடக் கூடாது. எல்லோரும் கொஞ்சமாவது பால் சேர்த்துக் கொள்ள வாய்ப்பு இருக்க வேண்டும். பால் போன்ற அத்தியாவசியமான உணவுப் பொருள்களுக்கு கண்டிப்பாக விதிவிலக்கு அளிக்கப்பட்டிருக்கவேண்டும். நிதி நிலைமையைப் பற்றி எடுத்துச் சொல்லி, நம்முடைய திட்டங்களை எல்லாம் நிறைவேற்ற வேண்டுமானால் நமக்குப் பணம் தேவை, என்கிற ஒரே கருத்தை இதில் அடிப்படையாகக் கொண்டு இந்த மாதிரியாக வரி போடக்கூடாது. நிபுணர்களும் இதைப்பற்றிச் சொல்லியிருக்கிறார்கள்.

ஏற்கனவேயே கம்பவுண்டிங் முறையில் சிறிய வியாபாரிகளுக்கு அதிகத் தொந்தரவு இருக்கிறது. சிறிய வியாபாரிகளைத் தொந்தரவு செய்வது அதிகாரிகளுக்கும் சுலபமாக இருக்கிறது. பெரிய வியாபாரிகளை விட வெகு சுலபத்தில் இவர்களை பயமுறுத்தி, மிரட்டி வரியை அதிகமாகப் போட்டு தொந்தரவு செய்ய முடிகிறது. ஆகவே சிறு வியாபாரிகளுக்கு எந்த எந்த வகையில் எல்லாம் கொஞ்சம் வசதி செய்து கொடுக்க முடியும் என்பதைப்பற்றித்தான் சிந்திக்க வேண்டும்.

கம்பௌண்டிங் லிமிட்டை 25 ஆயிரம் ரூபாய் வரையில் செய்து இருக்கிறார்கள். வரி விலக்கை 20 ஆயிரம் ரூபாய் ஆக வைத்துக் கொண்டு இந்த கம்பவுண்டிங் லிமிட்டை 40 ஆயிரம் வரையில் வைத்திருந்தால் சிறு வியாபாரிகளுக்கு அதிக வசதியாக இருந்திருக்கும். கணக்கு வைத்துக்கொள்ளும் தொல்லையும் இல்லாமலிருக்கும். பெரிய வியாபாரிகளைப் பொறுத்த

10th February 1959] [Sri K. Ramachandran]

வரையில் டாக்ஸ் இவேஷனுக்கு இடம் இல்லாமல் பார்த்துக்கொண்டால் போதும். நமது வருமானம் ஒருநாளும் குறையாது. ஏனென்றால், கம்பவுண்டிங் லிமிட்டை 40 ஆயிரம் என்று வைத்துக்கொண்டாலும்கூட ஒரு தினத்திற்கு 100 ரூபாய் வியாபாரம் செய்யக் கூடிய வியாபாரிக்குகூட அனுகூலமாக இருக்கும். 100 ரூபாய் ஒரு நாள் வியாபாரம் என்றால் அதில் இவர்களுடைய லாபம் ஒரு ரூபாய்க்கு 1 அணாதான். அதாவது நாள் ஒன்றுக்கு 6 ரூபாய் முதல் 10 ரூபாய் வரையில் கிடைக்கலாம். அதாவது மாதம் இவர்களுடைய லாபம் 300 ரூபாய்க்கு மேல் போகாது. சாதாரண குடும்பத்தை வைத்து சம்ரட்சிக்கத்தான் இது போதுமானதாக இருக்கும். ஆகவேதான் இந்த கம்பவுண்டிங் லிமிட்டை 40 ஆயிரமாகச் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தாற்போல ரிஜிஸ்ட்ரேஷன் ஆப் டீலர்ஸ். இதிலும் 15 ஆயிரம் வரையில் மட்டும் ரிஜிஸ்டர் செய்துகொண்டால் போதும் என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். சின்னச் சின்ன வியாபாரிகளை அதுவும் 7 ஆயிரம், எட்டாயிரம் வருஷ வியாபாரம் செய்யக் கூடியவர்களைக்கூட ரிஜிஸ்டர் செய்யவேண்டுமென்று சொல்வதில் மிகவும் சிரமங்கள் இருக்கின்றன. சில பேர்களுக்கு நிலையான இடம் இல்லாமலே வியாபாரம் செய்யவேண்டிய நிலை இருக்கிறது. அதுவுமின்றி பலயிடங்களுக்கு மாறக்கூடிய நிலையும் இருக்கிறது. அதனால்தான் 7,500 என்று இருப்பதை 15 ஆயிரமாக உயர்த்தவேண்டுமென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

பொறுக்குக் கமிட்டியில் கூட அதிக வரி போடுவதன் காரணமாக வியாபாரம் வேறு பிரதேசங்களுக்குச் சென்றுவிடக்கூடாதென்ற கருத்து சொல்லப்பட்டது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு பணம் வேண்டும். அதைக் குறைத்துவிடக் கூடாது என்றார்கள். அந்தச் சமயத்தில் சொல்கிற காலத்தில் கூட ஒரு காம்பிரிஹென்சிவ் லெஜிஸ்லேஷன் கொண்டு வரப்போவதாகச் சொன்ன அமைச்சர் அவர்கள் — அப்படி ஒரு சட்டத்தைக் கொண்டு வந்து நிறைவேற்ற முடியாமல் இருப்பதற்கு வருந்துகிறேன். உணவு தானியங்கள் மீது போடப்பட்டிருக்கக்கூடிய வரியை நீக்கிவிட்டு, ஒருமுனை விற்பனை வரியை எல்லாப் பொருள்களுக்கும் கொண்டு வருவதனால் என்ன பயன் உண்டாகும் என்பதை புள்ளி விவரங்களுடன் பரிசீலனை செய்து பார்க்காத வரையில் இதை என்னால் ஒப்புக் கொள்ள முடியவில்லை. இனிமேலாவது வியாபாரிகளுக்கு சௌகரியம் அளிக்கும் வகையில் இந்த மசோதாவில் சில பல நல்ல திருத்தங்களையாவது செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

**Sri S. LAZAR** : சேர்மன் அவர்களே, சபையின் முன் விவாதத்திற்கு வந்திருக்கிற 1958-ம் வருஷத்திய பொது விற்பனை வரி மசோதாவின் மீது என் கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன். ஏற்கனவே அமைச்சர் சொன்னது போல இந்தச் சட்டம் 1939-லேயே விதிக்கப்பட்டிருக்கிறது. நடைமுறையில் அவ்வப்போது ஏற்படுகிற சில பல சிக்கல்களுக்கு ஏற்ப பல திருத்தங்கள் அதில் செய்யப்பட்டு வந்திருக்கின்றன. இதனால் சர்க்காருக்கு ஒரு பக்கத்தில் அவஸ்தை. வியாபாரிகளுக்கு உண்டாகிற தொந்தரவுகள் ஒரு பக்கம். அதோடு சர்க்காருக்கு வரக்கூடிய வருமானமும் வராது செய்கின்றவர்களின் எண்ணிக்கையும் அதிகமாகிவிட்டது. இந்த மூன்று காரணங்களையும் வைத்துக்கொண்டு இந்த மசோதாவை நல்ல முறையில் திருத்தி அமைக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு இப்போது கொண்டுவரப்பட்டிருக்கிற மசோதாவை என்னால் பாராட்டாமல் இருக்க முடியாது. இந்தச் சட்டம் பொறுக்குக் கமிட்டிக்குச் சென்றதற்குப் பிறகு நல்ல திருத்தங்களோடு புது அம்சங்களும் சேர்ந்து வந்திருப்பதைப் பற்றி நாம் பாராட்டாமல் இருக்க முடியாது. அமைச்சர் அவர்கள் எடுத்துச் சொன்னது போல பல முக்கியமான அம்சங்கள் இதில் இருக்கின்றன. எந்த நோக்கத்தோடு இந்தச் சட்டத்தை நாம் கொண்டுவரவேண்டுமென்று நினைத்தோமோ அந்த நோக்கங்கள் இதில் பெரும் அளவுக்கு வெற்றி பெற்றிருக்கிறதென்பதைப் பார்க்கிறபோது நாம் எல்லாம் சந்தோஷப்பட

வாய்மையே வெல்லும்
TRUTH ALONE TRIUMPHS

[Sri S. Lazar] [10th February 1959

வேண்டியதாக இருக்கிறது. இந்தச் சட்டத்தை நன்றாகப் பரிசீலனை செய்து பார்க்கிறபோது இன்னும் ஒரு வேளை நமக்கு புது அம்சங்கள் ஏதாவது தோன்றி அதையும் சேர்க்கவேண்டுமென்று சொன்னால் இந்த மசோதா இன்னும் நல்ல முறையிலே அமையும் என்ற நோக்கத்தில் ஒரு சில கருத்துக்களைச் சொல்லமுற்படுகிறேன்.

இந்தச் சட்டத்தைப் பார்க்கிறபோது ஒரு சில கட்டுப்பாடுகள், ஒரு சில கஷ்டங்கள் அதிலும் குறிப்பாக லைசென்சு முறை எடுக்கப்பட்டிருக்கிறதைப் பார்க்கிறபோது நாம் மிக்க மகிழ்ச்சி அடைகிறோம். சாதாரணமாக விற்பனை வரியினுடைய முக்கியமான கருத்து இந்த சட்டத்திற்கும் இந்த வரிக்கும் மற்றைய வரிகளுக்கும் உள்ள பெரிய வித்தியாசம் விற்பனை வரி விதிக்கப் படுகின்றவன் என்று சொன்னால் தனிப்பட்ட மனிதன் பேரில் தனிப்பட்ட துறையில் இருக்கக்கூடியவர்கள் வியாபாரம் செய்கின்றவர்கள் மீது மொத்த வருமானத்தைப் பெருக்கிக் கொண்டவர்கள் மீது தனித்தனியாக அந்த வரிகள் விதிக்கப்பட்டிருக்கும். ஆனால் விற்பனை வரியைப் பொறுத்த வரையிலும் ஏழை முதல் பணக்காரன் வரைக்கும் இந்த நாட்டில் இருக்கக் கூடிய, மாகாணத்தில் இருக்கக் கூடிய 3½ கோடி மக்களும் ஒவ்வொருவரும் கொடுக்க வேண்டிய அம்சமாக அமையும் என்ற காரணத்தினால் இந்த வரியின் முக்கியத்துவத்தை உணர முடிகிறது. இந்தக் கண்ணோட்டத்தோடேயே இதை நாம் பார்க்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அந்தக் கண்ணோட்டத்தோடு பார்க்கிறபோதுதான் இந்த வரி சாதாரண ஏழை மக்கள் முதற்கொண்டு நாட்டில் இருக்கக்கூடிய ஒவ்வொரு தனிப் பிரஜையும் அதை பளுவாக நினைக்காதபடிக்கு எவ்வளவு குறைவாகப் போடமுடியுமோ அவ்வளவு குறைவாகப் போடவேண்டியது அவசியம் என் உணருகிறோம். ஆனால் அதேசமயத்தில் கனம் லோகநாதன் அவர்கள் எடுத்துச் சொல்கிறபடி குறைவான விகிதத்தில் வரியைப் போட்டு அதிலிருந்து யாரும் தப்ப முடியாதபடி நிர்வாகத்தையும் அமைக்கவேண்டும். அப்படிப் பார்க்கிறபோது இந்த வரியை எவ்வளவு குறைந்த கட்டணத்தில் நாம் விதிக்க முடியுமோ அந்தக் கட்டணத்தில் விதிக்கவேண்டிய அவசியம் இருக்கிறது.

11 a.m. அதேசமயத்தில் கூடிய சீக்கிரத்தில் அழுகக்கூடிய பொருள்களுக்கு, அன்றாடத் தேவைக்கு மிகவும் அத்தியாவசியமான பொருள்களுக்கு விதிவிலக்கு கொடுக்க முடியுமா என்பதைப் பரிசீலனை செய்ய வேண்டும். அதுவும் மக்களுக்கு மிகவும் முக்கியமான உணவுப் பொருள்களுக்கு விதிவிலக்கு வேண்டுமானால் அதனால் அரசாங்கத்திற்கு வரக்கூடிய வருமானத்தில் குறைவு ஏற்படும் என்று கருதினால் அதை நன்றாக பரிசீலனை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அப்படி பரிசீலனை செய்து உணவுப் பொருள்களுக்கு விதிவிலக்குக் கொடுத்தால் உண்மையில் மக்கள் மகிழ்ச்சி அடைவார்கள் என்று நான் அரசாங்கத்திற்கு தெரிவிக்க விரும்பு கிறேன்.

அடுத்தபடியாக வரி செலுத்தும் முறையிலே இப்பொழுது இருக்கக் கூடிய வரி விதிப்பை மாற்றி 10 ஆயிரம் ரூபாய் டர்ன் ஓவர் உள்ளவர் களுக்கு வரி கிடையாது என்று இப்பொழுது கொண்டுவந்துள்ள மசோதாவிலே சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் இதை நாம் பார்க்கும்போது டாக்டர் லோகநாதன் சமர்பித்த அறிக்கையில் கண்டுள்ளதையும் நாம் கவனிக்க வேண்டும். அதில் இப்பொழுது அரசாங்கத்திற்கு வருகின்ற வரியில் பெரும்பாலான வருமானம் 85·8 சதம், 50 ஆயிரத்திற்கு மேல் உள்ள வியாபாரிகளுக்குத்தான் உள்ளது. இன்னும் 25 ஆயிரம் ரூபாய்க்கும், 50 ஆயிரம் ரூபாய்க்கும் இடையே உள்ள வியாபாரிகளிடமிருந்து 6·8 சதம் வருமானம் கிடைக்கிறது. ஆகவே இந்த விகிதாசாரத்தை பார்க்கும் பொழுது இங்கு இருக்கக்கூடிய முறையிலேயே 25 ஆயிரம் ரூபாய்க்கு மேல் டர்ன் ஓவர் செய்பவர்களிடம்தான் 92 சதம் வருமானம் வருகிறது. இதைப் பார்க்கும்போது 8 சத விகிதம்தான் 25 ஆயிரம் டர்ன் ஓவர் இருக்க வேண்டும் என்ற வரையறை இருக்கிறது. ஆகையால் அதை மற்ற வகையில் சரிக்கட்டிவிட்டு 25 ஆயிரம் ரூபாய்க்கு விதிவிலக்கு கொடுப்பதற்கு அரசாங்கம் முன்வரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

10th February 1959] [Sri S. Lazar]

அடுத்தபடியாக மிக முக்கியமான விஷயம் என்னவென்றால், ஒரு முனை வரியைப்பற்றியது. பல பொருள்களின்மீது ஒரு முனை வரி போடப் போகிற காரணத்தால் வியாபாரிகளுக்கு இருக்கக்கூடிய தொல்லைகளும் இதனால் நீங்கும். இம்மாதிரி பல பொருள்களுக்கு ஒரு முனை விதிக்கக் கூடிய அம்சம் பாராட்டத்தக்கது. அதே சமயத்தில் மற்ற ராஜ்யங்களில் மிக முக்கியமான பொருள்களுக்கு விதிக்கக்கூடிய வரி விகிதத்தையும் நம் முடைய மாகாணத்தில் இருக்கக்கூடிய வரி விகிதத்தையும் பார்ப்போ மானால் நம்முடைய மாகாணத்தில் மிகவும் நல்ல முறையில் அமைந் திருக்கிறது என்பதை உணரலாம்.

அடுத்தபடியாக 7-வது பிரிவிலே ஒரு புதிய அம்சம் விற்பனை வரிச் சட்டத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது. அதாவது வியாபாரிகளின் டர்ன் ஓவர் அடிப்படையிலே அவர்கள் கொடுக்கவேண்டிய வரியை காம்பவுண்டு செய்யப்படவேண்டும் என்பது உண்மையிலேயே பாராட்டத்தக்க அம்சமாகும். இம்மாதிரியான கம்பவுண்டிங் முறை ஏற்படுத்துவதினால் பெருவாரியாக ஏற்படுத்தக்கூடிய தொல்லைகள் நீங்கிவிடும். அப்படிப் பார்க்கும்போது இந்த கம்பவுண்டு முறையைச் சற்று மாற்றி டாக்டர் லோகநாதன் அறிக் கைப்படி 40 ஆயிரம் வரை வருமானம் உள்ளவர்களுக்கு விதித்தால் இன் னும் பலருக்கு சௌகரியமாக இருக்கும் என்பது என்னுடைய அபிப் பிராயம். அதனால் அரசாங்கத்தின் வருமானம் எந்த விதத்திலும் குறை யாது. 10-வது பிரிவிலே ஒரு புதிய அம்சம் சேர்க்கப்பட்டிருக்கிறது. அதாவது ஒரு டீலர் 10 ஆயிரம் ரூபாய்க்கு மேல் டர்ன் ஓவர் இருக்கிறது என்று நிரூபிக்கவேண்டிய பொறுப்பை அந்த வியாபாரியின் தலைமீது சுமத்துவது ஒரு புதிய அம்சமாகும். ஏற்கெனவே ப்ரொஹிபிஷனை அமு லாக்கும்போது இம்மாதிரி ஒரு அம்சம் இருப்பதுபற்றி குறிப்பிட்டிருக் கிறேன். ஆதலால் இம்மாதிரி வியாபாரி தலைமேலே சுமத்துவது சரியல்ல. ஆனால் எந்த வியாபாரிக்கு 10 ஆயிரம் ரூபாய்க்கு மேல் அதிகமாக இருக் கிறது, அதனால்தான் வரி கொடுக்க வேண்டுமென்று எந்த உத்தியோகஸ்தர் சொல்லுகிறாரோ அவர் தலைமீது இந்தப் பொறுப்பைப் போடுவது நல்லது. இது ஒரு சாதாரண **Elementary knowledge**-க்கு சொல்லக்கூடிய விஷயம்.

12—23-வது விதிகளுக்கு புறம்பாக நடந்துகொண்டால் அபராதம் விதிக்கலாம் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அபராதம் விதிப்பதிலே சில குறைகள் இருக்கின்றன. அதாவது அவர்கள் கொடுக்கவேண்டிய வரிப்பணம் ஆயிரம் ரூபாயாக இருந்து அவர்கள் கொடுக்காமல் தப்பித்துக் கொண்டிருந்தால் அவர்கள் ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் கொடுக்க வேண்டியிருக்கிறது. அதாவது 1½ பங்கு கொடுக்கவேண்டியதாயிருக்கும். இது ஒரு நல்ல முறையாக அமையாததால் சர்க்கார் கூடிய விரைவிலே ஒரு திருத்தம் கொண்டுவர வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக இந்த மசோதாவில் சில வியாபாரிகள் வரி கொடுக்காமல் தப்பித்துக் கொண்டு பிறகு கண்டு பிடித்தால் அவர்கள் ஐந்து வருஷத்திற்கு கொடுக்க வேண்டிய வரிபணம் வரைக்கும் கணக்குப் பார்க்கலாம் என்று இருக்கிறது. அம்மாதிரி இல்லாமல் மூன்று வருஷம் என்று வைத்தால் இது நல்ல முறையில் அமைந்திருக்கும்.

அடுத்தபடியாக இன்னொரு முக்கியமான விஷயம். ஆனால் எந்த அளவிற்கு அது சாத்தியமாகும் என்பது பரிசீலனை செய்ய வேண்டிய விஷயம். 26-வது பிரிவிலே கொடுக்கக்கூடிய விளக்கமாவது வரி கொடுக்க வேண்டிய ஒரு வியாபாரி பணம் கொடுப்பதாய் இருந்தால் அந்தப் பணத்தை அரசாங்கமே அந்த மூன்றாவது நபரிட மிருந்து பெற்றுக்கொள்வதற்கு வசதி செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது.

இந்த அம்சமானது நமது அரசியல் சட்டத்திற்கு புறம்பாக அமைந்திருப்பதாக சந்தேகம் இருக்கிறது. ஆனால் இதிலே ஐந்தாவது உப பிரிவிலே அந்த மூன்றாவது நபர் அம்மாதிரி அந்த வியாபாரிக்கு பணம் கொடுக்க வேண்டியதில்லை என்று சொன்னால் இந்த விதி பொருந்தாது என்று கூறப்பட்டிருக்கிறது. இதைப் பார்க்கும்போது அரசாங்கத்தினுடைய நோக்கம் இதனால் நிறைவேறாது என்று தெரிகிறது. அதனால்
11-10 a.m. அரசாங்கம் இதை பரிசீலனை செய்து இந்த ஐந்தாவது உப பிரிவை அகற்றி விட்டால்தான் அரசாங்கத்தின் நோக்கம் நிறைவேறும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஆகவே 5-வது உப பிரிவை அகற்றிவிட்டால் அரசாங்கத்தின் நோக்கம் நல்லபடி நிறைவேறும் என்று நான் நினைக்கிறேன்.

**THE HON. SRI R. VENKATARAMAN** : சபைத் தலைவர் அவர்களே, இது சட்டப் பிரச்னையாக இருப்பதால், இதைநான் உடனே தெளிவுபடுத்த விரும்புகிறேன். ஒரு குறிப்பிட்ட நபரிடமிருந்து வாங்க வேண்டிய விற்பனை வரிப் பணத்தை அவருடைய **Judgment-debtor** இடமிருந்து வாங்குவதற்கு —அந்த **garnishee**-யிடமிருந்து வாங்குவதற்கு சிவில் ப்ரொஸிஜர் கோடில் என்ன ஷரத்துக்கள் இருக்கின்றனவோ, அவைகளுக்கு உட்பட்ட ஷரத்துக்கள் தான் இந்த மசோதாவில் இங்கே போடப்பட்டிருக்கின்றன. அவைகளுக்கு புறம்பான ஷரத்துக்கள் இங்கே போடப்படவில்லை. குறிப்பிட்ட ஒரு நபர் கொடுக்க வேண்டிய விற்பனை வரியைக் கோரும் நோட்டீஸைப் பெற்ற மூன்றாவது நபர், தாம் அந்த குறிப்பிட்ட நபருக்குப் பணம் கொடுக்க வேண்டியவராக இல்லை—தாம் அவருக்கு ஜட்ஜ்மெண்ட் **Debtor**-ஆக இல்லை—என்ற காரணத்தைக் கொண்டு வரிப் பணத்தைக் கொடுக்க மறுத்தால், அவர்மீது நடவடிக்கை எடுக்க வேண்டியதில்லை என்றும் இந்த மசோதாவில் விதிக்கப்பட்டிருக்கிறது. எனவே இவை ஒழுங்கான ஷரத்துகள் தான்.

**SRI S. LAZAR** : அடுத்தபடியாக, ஏற்கெனவே இருந்த சட்டத்தில் அப்பீல்களைப் பைசல் செய்யும் அதிகாரம் இலாகாவில் உள்ள அதிகாரிகளுக்குத் தான் இருந்துவந்தது. சாதாரணமாக, டெபுடி கமெர்ஷியல் டாக்ஸ் ஆபீசர் விதிக்கும் வரி சம்பந்தமாக ஆட்சேபனை செய்ய வேண்டுமானால் அதற்கு கமர்ஷியல் டாக்ஸ் ஆபீசரிடம் அப்பீல் செய்துகொள்ள வேண்டியிருந்தது ; அப்போது, ஒரே அப்பெலேட் ட்ரிப்யூனல்தான் இருந்து வந்தது. அந்த நிலையில் இரண்டு வேலைகளையும் ஒரே அதிகாரி பார்த்து வந்ததால் பல கோளாறுகள் ஏற்பட்டன. பல கோளாறுகள் ஏற்பட்டனவோ இல்லையோ, அதனால் மக்களுக்கு மிகவும் அதிருப்தி இருந்தது உண்மை. இந்த மசோதாவில், அந்த நிலையை மாற்றி, தனி ஜுடிஷியல் ட்ரிப்யூனலுக்கு வகைசெய்யப்பட்டிருக்கிறது. இது இந்த மசோதாவின் ஒரு சிறந்த அம்சம். ஜுடிஷியல் டிரிப்யூனல்களில் சட்டம் தெரிந்தவர்கள் நீதிபதிகளாக நியமிக்கப்படும் நிலையில் வியாபாரிகளுக்கு எந்த விதமான சந்தேகமும் இருக்க வேண்டிய அவசியமும் இல்லை.

மேலும், டிபார்ட்மெண்டல் அப்பீல்களுக்கும் வகை செய்யப்பட்டிருக்கின்றது. கோர்ட்டுகளுக்குச் சென்று பணம் செலவழிக்க விரும்பாதவர்களுக்கு இது மிகவும் அனுகூலமான அம்சம்.

அடுத்தபடியாக, கணக்குகளை வைத்துக்கொள்ளுவது சம்பந்தப்பட்ட ஷரத்துக்களைப் பொறுத்தவரையில், அரசியல் சட்டத்தின் 8-வது ஷரத்திலுள்ள பாஷைகளில் கணக்குகளை வைத்துக் கொள்ளலாம் என்று சொல்லப்பட்டிருப்பது அவ்வளவு உசிதமல்ல என்று நான் நினைக்கிறேன். நமது மாநிலத்தைப் பொறுத்தவரையிலும், பிரதேச மொழியானது அனேகமாக தமிழாக இருக்கிறது ; சில, இடங்களில் வேறு பாஷைகளும் இருப்பதாகக் கேள்விப்படுகிறோம். எனவே, இதுசம்பந்தப்பட்ட ஷரத்தை, கணக்குகளை பிரதேச மொழியில் அல்லது ஆங்கிலத்தில் வைத்திருக்க வேண்டும் என்று திருத்தியமைத்தால், கணக்குகளைப் பரிசீலிக்கும் அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்கு சௌகரியமாக இருக்கும் என்று நினைக்கிறேன்.

10th February 1959] [Sri S. Lazar]

இன்னொரு முக்கியமான விஷயம். அது இந்த மசோதாவில் இடம் பெறவில்லை. அதுசம்பந்தமாக கனம் அமைச்சர் பதில் அளிப்பார் என்று நம்புகிறேன். விற்பனை வரி சம்பந்தமாக ஒரு " இன்டெலிஜென்ஸ் அண்ட் இன்வெஸ்டிகேஷன் " இலாகா இருக்க வேண்டும் என்று டாக்டர் லோகநாதன் அவர்கள் தமது ரிப்போர்ட்டில் சொல்லி யிருக்கிறார்கள். உண்மையிலேயே அது அவசியம். இதற்கும் அரசாங்கம் ஏற்பாடு செய்யும் என்று எதிர்பார்க்கிறேன்.

விற்பனை வரியினால் மக்களுக்கு தொந்தரவு இருக்கக்கூடாது, அதனால் வியாபாரிகளுக்கு பளு ஏற்படக்கூடாது என்பன அரசாங்கத்தின் நோக்கங்கள். இந்த நோக்கத்தைக் கொண்டிருக்கும் அரசாங்கம் தனக்கு விற்பனை வரியினால் வருமானம் வரவேண்டும் என்றும் விரும்புகிறது. இந்த மூன்று நோக்கங்களுடன் இந்த மசோதாவை அரசாங்கம் கொண்டு வந்திருக்கிறது. இந்த மூன்று நோக்கங்களும் நிறைவேறவேண்டுமானால், இந்த இலாகாவிற்கு நியமிக்கப்படும் அதிகாரிகள் சிறந்தவர்களாகவும், நேர்மையானவர்களாகவும் இருக்க வேண்டும். இப்போதுள்ள அதிகாரிகள் சிறந்தவர்கள் அல்ல என்று நான் சொல்லவில்லை. இன்னும் சிறந்த அதிகாரிகளை நியமிக்க வேண்டும். வேண்டுமானால், அரசாங்கம் அந்த அதிகாரிகளுக்கு அதிகப்படியான ஊதியம் கொடுக்கலாம். அவ்வாறெல்லாம் செய்தால் இயற்றப்படும் சட்டம் நல்ல பலன் அளிக்கும் என்று சொல்லிக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

**SRI T. SAMPATH** : சபைத் தலைவர் அவர்களே, இந்த மசோதா மிகவும் முக்கியமான மசோதா. ஏனென்றால், இது அரசாங்கத்திற்கு அதிக வருவாயைத் தரக்கூடியது. நாம் சுமார் 10 கோடி ரூபாய் வருவாயை விற்பனை வரியின் மூலம் எதிர்பார்க்கிறோம். எனக்கு முன் பேசிய கனம் நண்பர் ஸ்ரீ. லாஸர், விற்பனை வரி விதிப்பின் வரலாற்றைச் சொன்னார். 1939-ம் ஆண்டில் விற்பனை வரிச் சட்டம் வந்தது. 1939-ம் ஆண்டிலிருந்து 30 ஆண்டுகள் ஆகிவிட்டன. விற்பனை வரிச் சட்டத்தால் சிக்கல்கள் ஏற்பட்டு, பல கோர்ட்டுத் தீர்ப்புகள் வந்திருக்கின்றன இந்தச் சிக்கல்களை யெல்லாம் தீர்க்க வேண்டுமென்றும், இந்த வரியை எந்த அளவில் விதித்தால் மக்களுக்கு கஷ்டம் இருக்காதோ அந்த அளவில் விதிக்க வேண்டுமென்றும் விரும்பி இந்த அரசாங்கம் டாக்டர் லோகநாதன் அவர்களை, இது சம்பந்தமாக ஒரு ரிப்போர்ட் தயாரித்து சமர்ப்பிப்பதற்கு நியமித்தது. அவர் ஒரு அறிக்கையை சமர்ப்பித்தார். ஓராண்டு காலத்திற்கு முன்பு இந்த மசோதா சபையில் சமர்ப்பிக்கப்பட்டது. அதற்குப் பிறகு இந்த ஓராண்டு காலம் இது பொறுக்குக் கமிட்டியால் பரிசீலிக்கப்பட்டது. பொறுக்குக் கமிட்டியின் ரிப்போர்டும் சபையில் வைக்கப்பட்டிருக்கிறது. பொறுக்குக் கமிட்டியினர் இந்த மசோதாவை நன்றாகப் பரிசீலித்து சில நல்ல மாறுதல்களை பல பிரிவுகளில் செய்திருக்கிறார்கள். இந்தத் திருத்த மசோதாவை நான் மகிழ்ச்சியோடு வரவேற்கிறேன். இருந்தாலும், இந்தத் திருத்த மசோதாவானது, கூடியவரையில் அரசாங்கத்திற்கு அதிக வருவாய் கொடுக்கக்கூடியதாகவே உருவாகியிருப்பதாக நான் நினைக்கிறேன். இந்த மசோதாவை நான் எதிர்க்கவில்லை. அரசாங்கத்திற்கு அதிக வருவாய் வருவதையும் ஆட்சேபிக்கவில்லை. ஏனென்றால், நம் திட்டங்களெல்லாம் வெற்றிகரமாக நிறைவேற வேண்டும் என்றும் அதற்கு அதிகப் பணம் வேண்டும் என்றும் கனம் அமைச்சர் சொல்லியிருக்கிறார். இருந்தாலும், மற்றொரு முக்கிய விஷயத்தை அரசாங்கம் கவனிக்க வேண்டும். வியாபாரிகள் மீது போடப்படும் விற்பனை வரியானது அவர்களுக்குச் சுமையாக இருக்கக்கூடாது. ஏனென்றால், வியாபாரிகள் மீது போடப்படும் வரியானது உண்மையில் மக்கள் மீது தான் விழுகிறது. இந்தக் கண்ணோட்டத்துடன் நாம் இந்தத் திருத்த மசோதாவைப் பரிசீலிக்க வேண்டும். அப்படிப் பார்க்கும்போது, இந்த மசோதாவில் இன்னும் சிலமாறுதல்களுக்கு இடம் இருக்கிறது என்று நான் நினைக்கிறேன்.

விற்பனை வரி வசூலிக்கப்பட வேண்டியவருக்கு இருக்க வேண்டிய குறைந்தபட்ச மொத்த வருட வருமானம் 5,000 ரூபாய் என்று இந்த மசோதாவில், செலக்ட் கமிட்டிக்குப் போவதற்கு முன்பு, நிர்ணயிக்கப்

[Sri T. Sampath] [10th February 1959

பட்டிருந்தது. அந்த வரம்பை பொறுக்குக் கமிட்டியினர் 10,000 ரூபாயாக உயர்த்தியிருக்கிறார்கள். இது மிகவும் வரவேற்கத்தக்க விஷயம் தான். எனக்கு முன்பு பேசிய ஸ்ரீ. ராமச்சந்திரன், இந்த வரம்பை 20,000 ரூபாயாக ஆக்க வேண்டுமென்று சொன்னார். அவர் கோருவது ஒப்புக் கொள்ளக்கூடியது என்று நினைக்கிறேன். ஏனென்றால், நாட்டில் இன்றுள்ளபொருளாதார நிலையிலும் பணவீக்க நிலையிலும், இந்த விதி விலக்கு வரம்பை 20,000 ரூபாயாக வைத்தால், சில்லறை வியாபாரிகளுக்கு பெரிய அளவில் நிவாரணம் கிடைக்கும். கனம் நண்பர்கள் ஸ்ரீ. லாஸர் அவர்களும் ஸ்ரீ. ராமச்சந்திரன் அவர்களும், உணவுப் பொருள்களுக்கு, சர்க்கார் விற்பனை வரியிலிருந்து விலக்கு அளிக்க வேண்டும் என்று சொன்னார்கள்.

அண்டை ராஜ்யங்களாகிய கேரளா, மைசூர், இந்த இரண்டு ராஜ்யங்களில் உணவுப்பொருள்களின் மேலுள்ள வரியை எடுத்து விட்டார்கள். இது நீண்ட நாளையப் பிரச்னை. வெகு நாட்களாகவே இதை வலியுறுத்தி வருகிறோம். ஆனால் இப்பொழுது பொறுக்குக் கமிட்டி என்ன சிபார்சு செய்திருக்கிறது என்று பார்த்தால் இப்பொழுது ஒவ்வொரு கட்டத்திலும் விதிக்கப்படும் 2 சத விகிதம், மல்டிப்பாயிண்ட் என்று சொல்வார்களே, அந்த வரியை ஒரு சதவிகிதமாக குறைத்தால் போதுமென்று சிபார்சு செய்திருக்கிறார்கள். அதே அளவில் கைத்தறி துணிகளுக்கு பூராவாக விதிவிலக்கு அளிக்கப் பட்டிருக்கிறது. உடை மக்களுக்கு எவ்வளவு முக்கியமோ அதை விட மிக முக்கியமானது உணவு. அந்தளவில் பார்ப்போமேயானால் உணவுப் பொருள்களுக்கு பூராவாக விதிவிலக்கு இருப்பது தான் பொருத்தமாகும். அதுதான் நியாயமென்றும் நான் எண்ணுகிறேன். அப்படி ஒருக்கால் அரசாங்கம் அதற்கு பூராவாக விலக்கு அளிக்க முடியாதென்று கருதினால் லோகநாதன் அவர்கள் சிபார்சுபடி ½ சத வீதம் ஆக உணவுப் பொருள்கள் மீதுள்ள வரியைக் குறைக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதையாவது ஏற்றுக் கொண்டால்தான் ஏழை மக்களை இந்த வரிச்சுமை பாதிக்காது. ஆகவே அந்தளவு அதை ½ சத வீதம் ஆக குறைக்க வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன். அடுத்தபடியாக, கைத்தறி, கைத்தறி ஜவுளி, நூல்கள், இவைகளுக்கு எல்லாம் வரியில் இருந்து பூராவாக விலக்கு அளிக்கப் பட்டிருக்கிறது. இதிலே, " ஹாண்ட் ஸ்பன் யார்ன் " என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது. ஷெடியூல், 3-ல், hand-spun yarn . . . . . என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது. ஆனால் கோராப் பட்டுகள், கோரா நூல்கள் எல்லாம் அதில் வரவில்லை. ஏற்கனவே கோராப் பட்டுகள், கோரா நூல்கள் இவைகளுக்கெல்லாம் நமது அரசாங்கம் விதிவிலக்கு அளித்தது. லோகநாதன் அவர்கள் சிபார்சில் கூட, 59-வது பக்கத்தில் " ஹாண்ட்ஸ்பண் " என்பதற்கு ஒரு விளக்கம் தந்திருக்கிறார்கள், " including all kinds of indegenous silks " என்று. எப்பொழுது கைத்தறி ஜவுளிகளுக்கும், கைத்தறி நூல்களுக்கும் விலக்கு அளித்திருக்கிறோமோ அதேமாதிரி பட்டுக்கும் நாம் விலக்கு அளிப்பது தான் பொருத்தமாகும். அதைப் பரிசீலனை செய்து அதற்கும் விதிவிலக்கு அளிக்க வேண்டுமென்று நான் அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன். அடுத்தாற்போல் பொறுக்குக் கமிட்டியின் முடிவு பெருவாரியான சாமான்களின் விஷயத்தில் நாம் கையாளும் ஒவ்வொரு கட்டத்திலும் 2 சத வீத வரி செலுத்தியாக வேண்டுமென்று செலக்ட் கமிட்டி சிபார்சு செய் திருக்கிறது. ஆனால் லோகநாதன் அவர்கள் இத்தகைய பலமுனை வரி 1 சத வீதத்திற்கு மேல் இருக்கக் கூடாதென்று தெளிவாக சொல்லியிருக்கிறார்கள்.

" In making these recommendations, I have taken full account of the revenue implication; I am convinced that the decision of the Government that multipoint levy is to be kept always at a moderate level, will go a long way in creating the condition of an effective and successful sales-tax system."

10th February 1959] [Sri T. Sampath]

என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது. ஆனால் அந்த ரிப்போர்ட்டின் சிபார்சுக்கு மாறுதலாக பொறுக்கு கமிட்டியானது 2 சத வீதமாக குறிப்பிட்டிருக்கிறார்கள். அமைச்சர் அவர்களும் தெரிவித்தார்கள், ஒரேஷியாக வருவாய் குறையக் கூடுமென்ற அச்சந்தான். ஆனால் வரி எவ்வளவு அதிகமாக இருக்கிறதோ அந்தளவு வரியில் இருந்து தப்பப் பார்ப்பார்கள். ஆகவே, இதை ஒரு சதவிகிதமாகக் குறைத்தால் வருவாய் குறைந்துவிடாது என்பதுதான் என் அபிப்பிராயம். அதைத் தான் லாஸர் அவர்களும் குறிப்பிட்டார்கள். இதனால் வருவாய் பாதிக்கப்படாது என்றுதான் நான் கருதுகிறேன். அடுத்தாற்போல், ராமசந்திரன் அவர்கள் முக்கியமான இன்னொரு விஷயத்தைப் பற்றி குறிப்பிட்டார்கள். கம்பவுண்டிங் ரேட் என்று சொல்லும் அம்சம், ரூ. 40,000 ஆக உயர்த்தப்படவேண்டுமென்று சொன்னார்கள். அதுவும் ஏற்கக் கூடிய விஷயம் என்றுதான் நான் கருதுகிறேன். அடுத்தபடியாக, லாஸர் அவர்கள் காய் கறி, பூ முதலிய பண்டங்கள் மீதுள்ள வரி விலக்கு வரம்பை, 30,000 ஆக நிர்ணயிக்கப்பட்டிருப்பதை அதிகமாக்க வேண்டுமென்று சொன்னார்கள். அதுவும் ஒப்புக் கொள்ளக்கூடிய விஷயந்தான், அதிகமாக சேதாரமாகும் பண்டங்கள் இவை. ஆகவே இந்த வரம்பை கொஞ்சம் கூடுதலாக்கி வைப்போமானால் மிகவும் சௌகரியமாக இருக்குமென்று எண்ணுகிறேன். இவைகளுக்கு பூராவாகவே விலக்கு அளித்திருந்தால் அது மிகவும் மகிழ்ச்சிகரமான விஷயமாக இருந்திருக்கும். அடுத்தபடியாக, ஹோட்டல் சம்பந்தமாக அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள். 2½ சத வீதம் என்பது கொஞ்சம் உயர்வாகவே இருக்கிறது என்பதுதான் என் எண்ணம். அடுத்தபடியாக, இந்த மசோதாவில் நாம் நல்ல பல அம்சங்களைக் காண்கிறோம். அமைச்சர் அவர்கள் குறிப்பிலே மூன்று விஷயங்கள் பற்றி குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இந்த மசோதா மூன்று பிரிவுகளாக பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒன்று, "அஸெஸ்மெண்ட் விங்", இன்னொன்று, "அப்பலெட் விங்". மூன்றாவது "இன்டெலிஜென்ஸ் விங்" ஒன்று, அதிகாரிகளின் உத்தரவுகள்பேரில் அப்பீல் செய்ய ஒரு பிரிவு, வரியில் இருந்து தப்பாமல் இருக்க ஒரு தனி பிரிவு. ரிவிஷன் பிரிவு சம்பந்தமாகவும் சொன்னார்கள். வரி சம்பந்தமாக இடப்படும் உத்தரவின் பேரில் அப்பீல் செய்ய பிரிவு 30-ல் இருந்து பல பிரிவுகள் இருக்கின்றன. உண்மையிலேயே நல்ல சிறந்த நோக்கத்துடனேயே பொறுக்கு கமிட்டி பல விஷயங்களை ஆராய்ந்து பார்த்து அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டமாதிரி இன்கம் டாக்ஸில் உள்ளபடியுள்ள அம்சங்களைப் பொருத்த வேண்டுமென்ற நோக்கத்தின் பேரில் இந்தப் பிரிவுகளை மாற்றியமைத்திருக்கிறார்கள். அது, மிகவும் வரவேற்கத்தக்கதாகும். 30-வது பிரிவு, அப்பலெட் ட்ரிப்யூனல் பற்றியது. அதில் ஜில்லா ஜட்ஜ் அளவில் ஒருவர் சேர்மெனாகவும், மற்ற இரண்டு மெம்பர்கள் கொண்ட குழு அப்பீல்களை விசாரணை செய்யும் என்று கூறப்பட்டிருக்கிறது. ஆனால் தற்போதுள்ள நிலையில் இந்த அப்பலெட் ட்ரிப்யூனல்கள் சென்னையில் இருந்து கொண்டுதான் இயங்கி வருகிறது. இதுபோன்ற ட்ரிப்யூனல்கள், எல்லா ஜில்லாக்களுக்கும் சுற்றுப்பிரயாணம் செய்து ஆங்காங்குள்ள அப்பீல்களை விசாரணை செய்யும்படியாக ஒரு வழிவகை செய்து கொடுத்தால் வியாபாரிகளுக்கு அது மிகவும் சௌகரியமாக இருக்கும். இந்த யோசனையை அமைச்சர் அவர்கள் பரிசீலனை செய்யவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன். கடைசியாக, நான் சொல்ல ஆசைப்படுவது, இந்த "கம்பவுண்டிங்" என்று சொல்லக்கூடிய அம்சம் இருக்கிறதே அதை எடுத்துப் பார்த்தால் 20% 50,000 ரூபாய்க்கு மேல் கொடுக்கக் கூடிய வியாபாரிகள் அதிகமாக இருக்கிறார்கள். 50,000க்கு குறைவாக இருக்கக் கூடியவர்கள் 15 சதம் வீதம் இருப்பார்கள். ஆகவே அவர்களுக்கு இந்தச் சலுகையை, (கம்பவுண்டிங்கை) அதிகமாக நாம் உயர்த்தி கொடுத்தால் அவர்களைப் பொறுத்தமட்டில் சௌகரியமாக இருக்குமென்று சொல்லிக் கொண்டு எனது வார்த்தையை முடித்துக் கொள்கிறேன்.

Sri M. P. SUBRAMANIAM : அவைத் தலைவர் அவர்களே, இந்த விற்பனை வரிச் சட்டம் ஏறக்குறைய 20 ஆண்டு காலமாக நம்முடைய மாநிலத்திலே அமுலாக்கப்பட்டு, நல்ல அனுபவமும், அறிவும், திற

[Sri M. P. Subramaniam] [10th February 1959

மையும் கொண்ட டாக்டர் லோகநாதன் அவர்கள் சமர்ப்பித்த அறிக்கையின் பேரில் இந்த மசோதா தயாரிக்கப்பட்டு, ஒரு ஆண்டு காலமாக பொறுக்குக் கமிட்டியின் பரிசீலனையில் இருந்து, இப்பொழுது விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. 20 ஆண்டு காலமாக அமுலில் இருந்த இந்தச் சட்டம் இப்பொழுது முழு அளவிலே புது ரூபத்தில் நம் முன்னிலையிலே வைக்கப்பட்டிருப்பதுபற்றி நாம் எல்லோரும் அறிவோம். இதுபற்றிய முக்கியமான சில அடிப்படையான விஷயங்களை மனதில் வைத்து கொள்ளுவது நல்லது என்பதை அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். நம்முடைய சென்னை மாநிலத்தைப் பொறுத்த வரையில் விற்பனை வரி அதிகப்படியான வருவாயை கொடுக்கக்கூடிய ஒரு வருவாய் மூலம் என்பதை நாம் நன்றாக உணர்வோம். ஆகவே, எந்த விதமாக திருத்தங்கள் கொண்டுவந்தாலும், இதனால் வரக்கூடிய வருமானம் குறையக்கூடாது என்பதில் அமைச்சர் அவர்களுக்கு எவ்வளவு அக்கரை இருக்கிறதோ, அதுபோலவே இந்த அவையில் உள்ள எல்லா உறுப்பினர்களுக்கும் அக்கரை இருக்கிறது என்பதை நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். மற்றும் இதிலே கவனிக்கவேண்டிய விஷயம் இந்த வரி விதிப்பை மாற்றி அமைக்கும் நேரத்தில் எந்த விதத்திலும் நம்முடைய ராஜ்யத்திலுள்ள வியாபாரம் வேறு ராஜ்யங்களுக்கு விரட்டப்படாமல் இருக்க வேண்டும் என்பது தான். இது மிகவும் முக்கியமாக கருதப்படவேண்டியது என்பதை நான் இங்கே வலியுறுத்திக்கூற விரும்புகிறேன். இந்த இரண்டு விஷயங்களையும் அடிப்படையாக வைத்துத்தான் இந்த மசோதாவை கவனிக்கவேண்டும். இதற்குள்ளாக எந்தத் திருத்தங்களை கொடுத்தாலும், அவைகளை ஒப்புக்கொள்ளாத் தயாராக இருப்பதாக பல முறை அமைச்சர் அவர்கள் சுட்டிக்காட்டி இருக்கிறார்கள்.

மற்றும் சில அடிப்படை விஷயங்களையும் நாம் கவனத்திலே கொள்ளுவது நல்லது என்று நான் எண்ணுகிறேன். கனம் லாஸர் அவர்கள் பேசுகிற நேரத்தில் குறிப்பிட்டதுபோல் டாக்டர் லோகநாதன் அவர்களின் அறிக்கையின்படி, விற்பனை வரியிலிருந்து கிடைக்கக்கூடிய வருமானம் பெரும்பாலும் ரூ. 50,000-க்கு மேல் விற்றுமுதல் இருக்கக்கூடிய பெரிய வியாபாரிகளிடத்திலிருந்து தான் கிடைக்கிறது. வருமானத்தில் ஏறக்குறைய 80 சதவிகிதம் 50,000 ரூபாய்க்கு மேற்பட்டு விற்று முதல் செய்யும் பெரிய வியாபாரிகளிடத்திலிருந்து தான் பெறுகிறோம். சிறிய வியாபாரிகளிடத்திலிருந்து கிடைக்கக்கூடிய வருமானம் குறைவு தான், பெரும்பாலான வருமானம் பெரிய வியாபாரிகளிடத்திலிருந்து தான் பெறுகிறோம் என்று சொல்லியிருக்கிறார்கள். அதை கவனத்தில் வைத்துக் கொள்ளுவது நல்லது.

குறிப்பிடவேண்டிய மற்றொரு விஷயம் என்னவென்றால், பல ஆண்டு காலமாக இந்த சட்டசபையில் உள்ள உறுப்பினர்களும், வியாபாரிகளும், மற்றவர்களும் விற்பனை வரியில் ஏமாற்றுங்கள் நிறைய இருக்கின்றன என்றும், ஆகவே, நிர்வாக இயந்திரத்தைச் சரி செய்தால் இப்பொழுது கிடைக்கின்ற வருமானத்தைப் போல் இரண்டு மடங்கு வருமானம் உறுதியாகக் கிடைக்கும் என்றும் அமைச்சர் அவர்களிடத்தில் நேரில் கண்ட பொழுதும், பொறுக்குக் குழுவினிடத்திலும் கூறியிருக்கிறார்கள். இந்த அடிப்படையான உண்மைகளை நன்றாக மனதில் வைத்து ஆராயவேண்டும். இவ்வளவையும் மனதில் வைத்து அமைச்சர் அவர்கள் பேசியபோதும்கூட, வருமானம் குறைந்துவிடும் என்ற காரணமாகத்தான் பல நல்ல ஆலோசனைகளையும் ஏற்க முடியாமல் போய்விட்டது என்று நான் எண்ணுகிறேன். டாக்டர் லோகநாதன் அவர்கள் கூறிய ஆலோசனைகள் பெரும்பாலும் ஏற்கப்பட்டுவிட்டன. அவைகள் இந்த மசோதாவில் இடம் பெற்றிருக்கின்றன என்று அமைச்சர் அவர்கள் சொன்னாலும் கூட, பெரும்பாலும் என்று சொல்லும்பொழுது அவருடைய முக்கியமான சில ஆலோசனைகள் ஏற்கப்படவில்லை என்று தான் நான் குறிப்பிடவேண்டியிருக்கிறது. ஒருமுனை வரி, பலமுனை வரி விஷயத்தில், வியாபாரிகளுக்கோ, மற்றவர்களுக்கோ நல்ல ஒரு தெளிவான கருத்து தெரிவிக்க முடியவில்லை என்பதை நாம் நன்றாக அறிவோம். ஏனென்றால், ஒருமுனை வரி போடுவதினால், வரிப்பளு கூடுமா, குறையுமா என்று அவர்கள் நல்ல

10th February 1959] [Sri M. P. Subramaniam]

தெளிவான முறையிலே புரிந்துகொள்ள முடியவில்லை. இருந்தாலும் டாக்டர் லோகநாதன் அவர்கள் பலமுனை வரி பற்றி சொல்லும்பொழுது, அதை ஒரு சதவிகிதமாக மாற்றுவது நல்லது என்று கூறியிருக்கிறார்கள். வருமானம் குறைந்து விடுமோ என்ற அவசியமல்லாத அச்சத்தினால், அமைச்சர் அவர்கள் இதுபற்றி கருதாமல் இருந்திருக்கவேண்டுமென்று நினைக்கிறேன். காங்கிரஸ் கட்சி உறுப்பினர்களும் மற்றும் பல உறுப்பினர்களும் வேண்டிக்கொண்டபடி சில சாதாரண சலுகைகள்கூட இதனால் அமைச்சர் அவர்களால் கொடுக்க முடியவில்லை. டாக்டர் லோகநாதன் அவர்கள் ஒரு இடத்திலிருந்து தன்னுடைய அறிக்கையை தயார் செய்யவில்லை. அனுபவமும், திறமையும் வாய்ந்த அவர் பல இடங்களிலும் சுற்றுப் பிரயாணம் செய்து, வெளி உலக அனுபவத்தையும் கொண்டு, பல வியாபாரிகளையும், நிர்வாகஸ்தர்களையும் கலந்து ஆலோசித்த பிறகே இந்த அறிக்கையை தயாரித்திருக்கிறார்கள். தோராயமாக ஒவ்வொரு பொருள்களின் மீதும் கிடைக்கக்கூடிய வருமானத்தையும் அவர்கள் அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்கள். அவர் கூறிய பலவற்றை நமக்கு ஆதாரமாகக் காட்டி பல திட்டங்களை நிறைவேற்றவேண்டும் என்று பல சந்தர்ப்பங்களில் குறிப்பிட்ட அமைச்சர் அவர்கள், இந்த ஒரு முக்கியமான விஷயத்திலே அவநம்பிக்கை கொள்ளவேண்டிய அவசியமில்லை என்று குறிப்பிட விரும்புகிறேன். பலமுனை வரி 2 சதவிகிதம் என்று இருப்பதை ஒரு சதவிகிதமாக குறைக்கலாம் என்று அவர் சொன்னதை புனர்பரிசீலனை செய்து பார்த்து ஏற்றுக் கொள்ளவேண்டுமென்று அமைச்சர் அவர்களை கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதுபோலவே, உணவு தானியங்கள், அழிந்துபோகக்கூடிய பொருள்கள், காய் கறிகள், வெற்றிலை, வாழை இலை போன்ற பொருள்களுக்கு ½ சதவிகிதம் தான் வரி விதிக்கவேண்டுமென்று டாக்டர் லோகநாதன் அவர்கள் கூறியிருக்கிறார்கள். இம்மாதிரி பொருள்களை வியாபாரம் செய்யக்கூடிய சிறு வியாபாரிகளிடமிருந்துதான் விற்பனைவரி சம்பந்தமாக ஏராளமான புகார்கள் வந்திருக்கின்றன. அவர்களுக்குத்தான் அதிகாரிகளின் தொல்லைகள் அதிகமாக இருக்கின்றன என்று தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இவர்களுக்கு எந்த விதத்திலும் நிவாரணம் இல்லை என்றுதான் சொல்லவேண்டும். அமைச்சர் அவர்கள் 10,000 ரூபாய் வரையில் விற்றுமுதல் செய்யக்கூடிய வியாபாரிகளுக்கு விதிவிலக்கு அளித்திருக்கிறோம், அதற்கு மேல் வியாபாரம் செய்பவர்கள் கணக்கு வைத்திருக்க முடியாதா என்று கேட்கலாம். 1939-ம் ஆண்டிலிருந்தே ½ சதவிகித வரியும், 10,000 ரூபாய்க்கு விதி விலக்கும் அளித்திருக்கிறோம். இந்த 20 ஆண்டுகளுக்குள்ளாக விலைவாசிகள் எவ்வளவோ உயர்ந்திருக்கின்றன. ஆகையால் இப்பொழுது 10,000 ரூபாய்க்கு மேல் வியாபாரிகள் கணக்கு வைத்துக்கொள்ளவேண்டுமென்றால் சாதாரண சிறிய வியாபாரிகள் கூட கணக்கு வைக்கவேண்டி வரும். ஏற்கனவே குறிப்பிட்டபடி பெரும்பாலான வருமானம் பெரிய வியாபாரிகளிடத்திலிருந்து கிடைக்கின்றது. சிறு விபாபாரிகளிடத்திலிருந்து கிடைக்கக் கூடிய வருமானம் மிக குறைவு. இதன் காரணமாக சிறு வியாபாரிகளுக்கு பல சலுகைகள் அளிப்பதின் மூலம் தான் அவர்களிடமிருந்து வரக்கூடிய புகார்கள் குறையும், அவர்களுடைய வரிப்பளுவும் குறையும், இதை நாம் நன்றாக மனதில் வைத்துக்கொள்ள வேண்டுமென்று அமைச்சர் அவர்களை கேட்டுக்கொள்ளுகிறேன். அந்த முறையில் இந்தப் பிரச்சனையை அணுகினால் 10,000, 5,000 ரூபாய் கூடுதல் விற்றுமுதல் செய்யும் வியாபாரிகளுக்கு விதி விலக்கு அளிப்பதில் அதாவது விதிவிலக்கு வரம்பை உயர்த்துவதிலே பெரிய ஆட்சேபணை காணமுடியாது.

உணவுப்பொருள்களுக்கு விதிவிலக்கு பல இடங்களிலே அளித்திருக்கிறார்கள். மைசூர், கேரளா இந்த இடங்களிலெல்லாம் உணவுப் பொருள்களுக்கு விதிவிலக்கு அளித்திருக்கிறார்கள். இவைகளுக்கு விதி விலக்கு அளிக்கவேண்டுமென்று எல்லா தரப்பினர்களும் பல ஆண்டுகளாக வலியுறுத்தி வந்திருக்கிறார்கள். ஆகையால் உணவுப்பொருள்களுக்கு ½ சதவிகிதமாகவாவது வரியை குறைக்கவேண்டும் என்று மிக உறுதியாக அமைச்சர் அவர்களை நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

[Sri M. P. Subramaniam] [10th February 1959

(இந்த சமயத்தில் மிஸ்டர் ஸ்பீக்கர் தலைமை வகித்தார்).

இந்த விஷயம்பற்றி சட்டசபையில் விவாதம் செய்யும்பொழுது புனராலோசிக்கலாம் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். இந்த சந்தர்ப்பத்தில் இதுபற்றி எல்லா தரப்பினர்களின் ஒருமித்த கருத்தை அவர்கள் உறுதியாக கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். எற்கெனவே நமக்கு அரசாங்கம் சில அழியும் பொருள்களுக்கு விதிவிலக்கு அளித்திருக்கிறார்கள். டாக்டர் லோகநாதன் அவர்கள் எல்லாப் பொருள்களுக்கும் வரி விதிப்பதே சிறந்த முறை என்றும் இந்த மறைமுகமான வரியை எல்லோரும் கொஞ்சம் தாங்குவது தான் நல்ல அடிப்படை பொருளாதாரக் கொள்கை என்று சொல்லியிருக்கிறார். ஆகவே, முழு விதி விலக்கு அளிக்கவேண்டுமென்ற கோரிக்கையை எற்றுக்கொள்ளாவிட்டாலும், அவர் குறிப்பிட்டபடி குறைந்தது $\frac{1}{2}$ சதவிகிதமாவது குறைக்கவேண்டுமென்று அமைச்சர் அவர்களை வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

மற்றும் ஓரிரண்டு விஷயங்களைப்பற்றி குறிப்பிட விரும்புகிறேன். கைத்தறிக்கு விதி விலக்கு அளித்ததைப்போல் பனை மரத்திலிருந்து செய்யக்கூடிய பொருள்களுக்கும் விதி விலக்கு அளிக்கவேண்டும். மதுரை, ராமனாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்களில் இம்மாதிரி கையால் எராளமான பொருள்கள் செய்யப்படுகின்றன. இந்த 'ஹாண்டி கிராப்ட்ஸுக்கு' விதி விலக்கு அளிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இதனால் வரக்கூடிய வருமானம் 2 அல்லது 3 லட்சம் ரூபாய் தான் என்று கணக்கு போடப்பட்டிருக்கிறது. ஆகையால் இந்தப் பொருள்களுக்கு விதி விலக்குக் கொடுப்பது மிகவும் பொறுத்தமானது. இதனால் குடிசைத் தொழில்களுக்கு, சிறு கைத்தொழில்களுக்கு நல்ல ஆதரவு கிடைக்கும்.

மற்றும் குறிப்பாக நான் சொல்லவிரும்புவது என்னவென்றால்: புண்ணாக்குக்கு 3 % ஒரு முனை வரி போடப்பட்டிருக்கிறது. அதற்கு விதி விலக்கு அளிக்க வேண்டுமென்று மீண்டும் அமைச்சர் அவர்களை வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன். பெரும்பாலும் புண்ணாக்கு விவசாயிகளுக்கு பயன்படக்கூடியது. அவர்களுக்கு அது எருவாக பயன்படுகிறது. வேண்டிய அளவுக்கு அவர்களுக்கு ரசாயன உரத்தை கொடுக்க முடியாத நிலைமையிலே கிராமங்களிலே பசுந்தாள் உரத்திற்கு அடுத்தபடியாக அவர்கள் புண்ணாக்கை பல ஆண்டுகளாக உரமாக உபயோகப்படுத்துகிறார்கள். அதற்கு மேல் கால்நடைக்கு தீவனமாகவும் பயன்படுத்துகிறார்கள். ஆகவே புண்ணாக்கு விவசாயிகளுக்கு இந்த இரண்டு முக்கியமான விஷயங்களுக்கு பயன்படுகிறது. அமைச்சர் அவர்கள் பெரிய எக்ஸ்பெல்லர் புண்ணாக்கை மனதில் வைத்துக்கொண்டு 3 சதவிகிதம் வரி விதித்திருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். கிராமங்களில் செக்குகளில் சிறிய அளவில் புண்ணாக்கு வியாபாரம் செய்யப்படுகிறது. ஒரு முனை வரி அதற்கு கொடுக்க வேண்டுமென்றால் சிறிய செக்குகள் வைத்துக்கொண்டிருக்கும் கிராமவாசிகள்கூட வரி கொடுக்கவேண்டியிருக்கும். அவர்கள் இதனால் பெரிதும் பாதிக்கப்படுவார்கள். ஆகவே, இதை மனதில் வைத்துக்கொண்டு புண்ணாக்குக்கு விதி விலக்கு அளிக்கவேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இறுதியாக ஒன்றை நான் குறிப்பிட விரும்புகிறேன். 59-வது பிரிவின்படி அரசாங்கம் ஒரு விசேஷ அதிகாரத்தை மேற்கொள்ளுகிறார்கள். அது பற்றி கூட அமைச்சர் அவர்கள் பேசும்போழுது இறுதியில் விளக்கிச் சொன்னார்கள். மத்திய அரசாங்கத்திலே வரவு செலவுத் திட்டத்தில் திடீரென்று எதாவது வரியை, உயர்த்தினால், அந்த நேரத்தில் விலை எற்றத்தை, இறக்கத்தை தவிர்ப்பதற்கு, சட்டமில்லாமல் நோடிபிகேஷன் மூலம் வரியை வசூலிப்பதற்கு அதிகாரம் எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். அதேமாதிரி அதிகாரம் 'டாரிப் ஆக்ட்' கலால் வரி சட்டம் இவைகளிலும் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. அம்மாதிரி தனிப்பட்ட அதிகாரத்தை மத்திய அரசாங்கம் எடுத்துக்கொண்டிருப்பதுபோல், இந்த விற்பனை வரி மசோதாவிலும்கூட ஒரு விசேஷமான அதிகாரத்தை, இதுவரையில் நம் ராஜ்யத்தில் எடுத்து கொள்ளாத புதிய அதிகாரத்தை 59-வது பிரிவின் பிரகாரம் எடுத்துக்

**10th February 1959]      [Sri M. P. Subramaniam]**

கொள்ளப்போகிறார்கள். அதாவது, அரசாங்கம்சட்டமில்லாமலே ஒரு நோடிபிகேஷன் மூலம் 1, 2 ஷெட்யூலில் கூறப்பட்ட பொருள்களின் எண்ணிக்கையை அதிகரிக்கவோ, குறைக்கவோ அல்லது மாற்றவோ செய்யலாம். அதாவது நோடிபிகேஷன் மூலம் வரியை உயர்த்துவதற்குக்கூட அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது. இதுவரையில் வரி விதிக்கப்படாத பொருள்களையும் ஷெட்யூலில் சேர்க்கலாம்.

பொதுவாக இதை மனதில் வைத்துக்கொண்டு பார்க்கும்போது இம் மாதிரி விஷயத்தில சட்டசபைக்கு இருக்கின்ற அதிகாரத்தை பயன்படுத்தாத வகையில் அரசாங்கம் எடுத்துக்கொள்வது என்பது சரியான காரியம் என்று சொல்ல முடியாது. தவிர்க்க முடியாத நேரங்களில் ஆர்டினன்ஸ் மூலம் பல சட்டங்கள் கொண்டுவரப்பட்டிருக்கின்றன. ஆனால் சட்டசபை கூடியிருந்தாலும் கூட இந்த அதிகாரத்தை வேறொரு இடத்தில் கொடுப்பது என்பது நியாயமாகாது. அமைச்சர் அவர்கள் வேண்டுமென்றால் சொல்லலாம் ஒரு பொருளுக்கு திடீரென்று வரிவிதிப்பதற்கு வேண்டிய ஒரு மசோதாவை சட்டசபையில் கொண்டு வருவது என்பது இயலாத காரியம் என்று வேண்டுமானால் சொல்லலாம். ஆனால் கொள்கை அடிப்படையில் நான் சொல்ல விரும்புவது என்ன வென்றால் சட்டசபைக்கு இந்த அதிகாரம் எல்லாம் இருக்கவேண்டும் என்று நாம் எல்லாம் ஒப்புக்கொண்ட பிறகு சில பொருள்களுக்கு வரி போடுவதற்கு சாதாரண ஒரு நோட்டிபிகேஷன் மூலம் தெரிவித்து வரி விதித்துவிட்டால் போதும் என்று சொன்னால் நம்முடைய ஜனநாயக அடிப்படைக்கே இது தவறானது என்பதை நான் வலியுறுத்திச் சொல்ல ஆசைப்படுகிறேன். ஆர்டினன்ஸ் பவர் பிரகாரம் சில அவசர சட்டங்களை பிறப்பிக்கலாம் என்கின்ற அதிகாரத்தை சட்டசபை இல்லாத நேரத்தில் கவர்னரோ அல்லது ராஷ்டிரபதியோ பயன் படுத்திக் கொள்ளலாம். ஆனால் இப்போது நம் முன் வந்திருக்கும் சட்டத்தின் பிரகாரம் சட்டசபை கூடியிருந்தாலும் கூட, வரி விதிக்க வேண்டிய அதிகாரத்தைப் பெற்றிருக்கிற இந்த சட்டசபையை கலந்து ஆலோசியாமல் நோட்டிபிக்கேஷன் மூலம் வரி விதிக்கலாம் என்று செக்ஷன் 59-ன் பிரகாரம் அதிகாரத்தை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். ஏற்கனவே வரியை குறைப்பதற்கும் விதிவிலக்கு அளிப்பதற்கும் செக்ஷன் 17-ன் படி அதிகாரத்த எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் வரி விதிக்கப்படாத ஒரு பொருளின் மீது புதிதாக வரி விதிக்கவேண்டுமென்றால் சாதாரணமான ஒரு நோட்டிபிகேஷன் மூலம் வரியை விதிக்கலாம் என்றுள்ள அதிகாரத்தை எடுத்துக்கொள்வது என்பது ஜனநாயகத்தில் நம்பிக்கை கொண்டிருக்கும் நமது சட்டசபையின் அடிப்படைக்கே நேர்விரோதமானதாகும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். சட்டசபை அங்கத்தினர்கள் இந்த கொள்கையை உணருவார்களானால் நிச்சயமாக இதற்கு ஒத்துக்கொள்ளமாட்டார்கள். இருபது ஆண்டு காலத்தில் இன்னும் இதற்கு ஒரு சரியான முறையை கொண்டு வர முடியவில்லை, அதிலும் பரவலாக எல்லா வியாபாரிகளுக்கும் இந்த வரிவிதிப்பை ஏற்படுத்த வேண்டும் என்று மத்திய அரசாங்கம் சொல்லும் போது நமக்கும் எல்லா வியாபாரத்தின் மீதும் வரி விதிப்பை ஏற்படுத்த வேண்டியிருக்கும், அப்போது, நாம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்பதற்காக ஆலோசித்துப்பார்த்துத்தான் இந்த பிரிவு போடப்பட்டிருக்கிறது என்று அமைச்சர் அவர்கள் கூறினார்கள். இருந்தாலும் இது போன்ற சட்டசபையின் ஒரு அதிகாரத்தை எக்ஸிக்யூட்டிவ் கையில் ஒப்படைப்பது என்பது தவறான அடிப்படையாகும் என்பதை தெரிவித்துக் கொண்டு, இந்த நிலையை தவிர்க்கவேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறேன். 11-40 a.m.

*SRIMATHI KAMALAMBUJAMMAL: கனம் அவைத்தலைவர் அவர்களே, சபையின் முன்பு கொண்டு வரப்பட்டிருக்கும் மசோதா மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். இந்த மசோதாவானது இருபது வருடங்களுக்கு முன்பே கொண்டு வரப்பட்டு 1959-ம் ஆண்டில் அதாவது 1958-ல் பல திருத்தங்கள் செய்யப்பட்டு இப்போது கொண்டு வரப்பட்டிருந்தாலும் கூட இன்னும் இம்மசோதாவில் திருத்தங்களே ஏற்படாது என்று சொல்லு

வதற்கில்லை. இன்னும் இந்த மசோதாவில் எத்தனையோ திருத்தங்கள் காலாகாலத்தில வரக்கூடும் என்று சொல்லுவதற்குரிய வகையில் பல சான்றுகள் இதில் இருக்கின்றன. இந்த விற்பனை வரி மசோதா நம் மாகாணத்திறகு வருமானம் கிடைப்பதற்கு காம தேனு போன்றதாக இருந்தாலும் கூட இதை அமுலுக்கு கொண்டு வருவதற்கு முன்னால் இதைப்பற்றி தீர்க்கமாக ஆலோசனை செய்து, எத்தனையோ முறை ஆலோசனை செய்யப்பட்டிருந்தாலும் கூட மேலும் மேலும் தீர்க்கமாக ஆலோசனை செய்து முடிவு எடுக்கவேண்டிய ஒரு முக்கியமான மசோதாவாகும். இந்த மசோதாவை நன்றாக துருவிப் பார்க்கும்போது எந்த பொருளுக்கும் விற்பனை வரியிலிருந்து விலக்களிக்கப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. முக்கியமாக உணவுப்பொருள்களுக்கும் அதிலும் காய்கறி வகைகளுக்கும் கூட மசோதாவின் பிரகாரம் விற்பனை வரி விதிக்கப்பட்டிருக்கிறது. டாக்டர் லோகநாதன் அவர்கள் இதைப்பற்றி எத்தனையோ காலமாக ஆராய்ந்து பார்த்து, இதைப்பற்றி நன்றாக பரிசீலனை செய்து ஒரு அறிக்கையை சமர்ப்பித்தார்கள். அந்த அறிக்கையை பார்க்கும்போது அதில் பல மாறுதல்கள் செய்யப்பட்டிருப்பதை நாம் காண்கின்றோம். டாக்டர் லோகநாதன் அவர்களுடைய அறிக்கையில் உணவுப்பண்டங்களுக்கும் காய்கறி வகைகளுக்கும் அரை சதவிகிதம் வரி விதிக்கலாம் என்கிற கருத்தை தெரிவித்திருக்கிறார்கள். ஆனால் பொறுக்கு கமிட்டியில் இதைப்பற்றி ஆலோசித்துப்பார்த்து அரை சதவிகிதம் என்று இருப்பதை மாற்றி ஒரு சதவீதம் இருக்கவேண்டும் என்கின்ற முறையில் மாற்றி அமைத்திருக்கிறார்கள். ஆகவே வரிகள் விதிக்கும்போது சில பொருள்களுக்கு விதிவிலக்கு அளித்திருக்கலாம். அண்டை ராஜ்யங்களில் அதாவது கேரள ராஜ்யத்திலும் மைசூர் ராஜ்யத்திலும் உணவுப் பண்டங்களுக்கு விதிவிலக்கு அளித்திருக்கிறார்கள். ஆனால் எல்லா காரியங்களிலும் மற்ற ராஜ்யங்களுக்கு எல்லாம் முன்னோடியாக இருக்கும் நமது சென்னை ராஜ்யம் இதில் வரி விதிப்பிலிருந்து விதிவிலக்கு அளிக்க தவறிவிடுமானால் ஓரளவு நமது கடமையை செய்ய தவறியவர்களாவோம் என்று தான் சொல்ல வேண்டியிருக்கிறது. உணவு தான்யங்களைப் பொறுத்தவரையில் இதற்கு விதிவிலக்கு அளித்துவிட்டால் வருமானம் குறைந்துவிடும் என்று சொன்னாலும் கூட டாக்டர் லோகநாதன் அவர்கள் குறிப்பிட்டிருப்பது போல் இவற்றிற்கு அரை சதவீதமாக குறைத்தால் நலமாக இருக்கும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். காய்கறிகளைப் பொறுத்தவரையில் இந்த அரை சதவீதத்திலிருந்தும் விதிவிலக்கு அளிக்கப்பட வேண்டியது மிக முக்கியமாகும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். உணவு தான்யங்களாவது ஸ்டாக் வைத்து கடையில் ரசிது முதலியவைகள் வைத்து வியாபாரம் செய்யக்கூடும். ஆனால் காய்கறிகளை பொறுத்த வரையில் ரசீதுகள் வைத்திருப்பதோ அல்லது இதற்கு என்று கணக்குகள் வைத்திருப்பதோ கிடையாது. இந்த விஷயம் எல்லோருக்கும் தெரியும். காய்கறி வகைகளை வியாபாரம் செய்யும் வியாபாரிகளும் கிழங்கு வியாபாரிகளும் செலக்ட் கமிட்டியின் முன் வந்து தங்கள் குறைகளை எடுத்து விளக்கிச்சொன்னார்கள் என்று ரிப்போர்ட்டிலிருந்து தெரிகிறது. காலையில் மூன்று மணிக்கு மேல் வியாபாரத்தை ஆரம்பித்து மாலை 5 அல்லது 6 மணிக்குள்ளாக வியாபாரம் செய்து முடிக்க வேண்டும். மேலும் இவர்கள் வியாபாரம் செய்யக்கூடிய கடைகளில் பெரும்பாலும் மின்சார விளக்குகள் கிடையாது. கணக்கு வைப்பதற்கோ அல்லது கணக்குப்பிள்ளை வைப்பதற்கோ அவர்களுக்கு வசதி கிடையாது. ஆகவே அவர்கள் காலை மூன்று மணியிலிருந்து ஆறு மணிக்குள்ளாக அவசர அவசரமாக வியாபாரம் செய்யும்போது அதற்கெல்லாம் கணக்குவைத்துக்கொள்ளவேண்டும் என்று சொல்லுவது ஒரு அர்த்தமற்ற காரியமாகும். பொதுவாக வியாபாரிகளிடம் கணக்கு வைத்துக் கொள்ளவேண்டும் என்று சொல்லும் போதுதான் பல தொல்லைகளும் ஏற்படுகிறது. அதோடு வியாபாரிகள் கணக்கு வைத்துக்கொள்ள தவறுவார்களேயானால் அவர்களை ப்ராஸிக்யூட் செய்வதற்கும் அவர்கள் மேல் அபராதம் விதிப்பதற்கும் சட்டத்தில் விதிகள் இருக்கின்றன. இம்மாதிரி செய்யும்போது சிறு சிறு வியாபாரிகள் மிகவும் பாதிக்கப்படுவார்கள் என்பதை நாம் முக்கியமாக உணர வேண்டும். அதிலும் முக்கியமாக காய்கறி கிழங்குகள் எல்லாம் காலையில் புதிது பதிதாக இருக்கும், மாலையில் வாடி வதங்கிப்

போகக்கூடிய நிலைமையில் தான் இவை இருக்கின்றன. இந்த நிலைமையில் இதற்கெல்லாம் கணக்கு வைத்துக்கொள்ள இயலுமா என்பதை நாம் பார்க்கவேண்டும். கிழங்கு வகையில் உருளைக் கிழங்கு வெளி நாடுகளுக்கு எல்லாம் ஏற்றுமதி செய்யப்படுகிறது என்று கூறலாம். ஆனால் கிழங்குவகைகளில் இருக்கக்கூடிய கருணைக்கிழங்கு, சேப்பங்கிழங்கு, மரவெள்ளிக் கிழங்கு போன்ற வகைகளுக்கு கணக்கு வைத்துக்கொள்வது மிகவும் கஷ்டமான காரியமாகும். ஒரு நாள் கழிந்தால் இந்த கிழங்குகள் எல்லாம் கெட்டுவிடக்கூடியதாகும். ஆகவே இந்த காய் கறி வகைகளுக்கும் கிழங்கு வகைகளுக்கும் விதிவிலக்கு அளிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் இதற்கெல்லாம் விரிவான கணக்கு தேவையில்லை. மொத்தமான கணக்கு வைத்திருந்தால் போதும் என்றிருந்தாலும்கூட தோராயமாக கணக்கு வைப்பதற்கும் இதில் பல தொல்லைகள் ஏற்படும். கணக்கு வைக்கவேண்டும் என்று சொல்லும்போது தான் வியாபாரிகளுக்கு பலவிதமான கஷ்டங்கள் ஏற்படுகிறது. ஆகவே இதற்கு விதிவிலக்கு அளிப்பது மிகவும் பொருத்தமாக இருக்கும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். நெல்லுக்கும் அரிசிக்கும் தனித் தனியாக வரி போடுகிறார்கள். நெல் ரூபமாக இருக்கும்போதும் வரி இருக்கிறது அதுவே அரிசி ரூபமாக இருக்கும்போதும் வரி. இப்படி இரண்டு 11-50 a.m. இடங்களில் வரி இருப்பதால் ஒன்று நெல்லாக இருக்கும் போது வரி இருக்கவேண்டும், அல்லது அரிசியாக இருக்கும்போது வரி இருக்கவேண்டும். நெல்லுக்கும் வரி, அரிசிக்கும் வரி என்று வைத்தால் இரட்டிப்பு மடங்கு வரி—அதாவது மல்டி பாயிண்ட் வரி—வந்து விடாதா என்று அதையும் யோசித்து நெல்லுக்கோ அல்லது அரிசிக்கோ என்ற முறையில் வரி விதிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக புண்ணாக்கு மாடுகளுக்குத் தீவனமாகவும், விவசாயிகள் அதை உரமாகவும் உபயோகிப்பதாலே, விவசாயிகளின் முன்னேற்றத்தைக் கருதி ஏற்கெனவே எத்தனையோ திட்டங்களையெல்லாம் வகுத்துப் பல வசதிகளைச் செய்து கொடுக்கும் நாளிலே, பிண்ணாக்கை விவசாயிகள் உரமாக உபயோகிப்பதாலும், கால்நடைகளுக்குத் தீவனமாக இருப்பதாலும், அதற்கு வரி விலக்கு அளிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, இந்த மசோதாவின் மீது சொல்லக்கூடிய திருத்தங்களையெல்லாம் கமிட்டியிலே நன்றாகப் பரிசீலித்து ஆலோசனை செய்து முடிவு செய்து விட்டோம் என்று சொன்னாலும் கூட, மீண்டும் மீண்டும் ஆலோசனை செய்து, இப்போது சொல்லப்படும் திருத்தங்களையும் ஏற்றுக்கொண்டு அமைச்சர் அவர்கள் இதை நல்ல முறையில் நிறைவேற்றவேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

**Sri J. MATHA GOWDER :** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த விற்பனை வரி மசோதாவைப் பார்க்கும்போது, இதிலே நம்முடைய மாகாணத்தின் வருவாயைக் குறைக்கக்கூடாது என்ற ஒரே நோக்கத்தோடு வரி விதிப்பது அவ்வளவு உசிதமாகாது என்று கருதுகிறேன். உதாரணமாக இந்த விற்பனை வரி, லாபம் இருந்தாலும், நஷ்டம் இருந்தாலும், அவர்களுடைய டர்னோவரை வைத்து—எவ்வளவு ரூபாய்க்கு வியாபரம் செய்கிறார்களோ, அந்த வியாபாரத்தை வைத்து—அதன் அடிப்படையில் விதிக்கப் போகிறோம். அதிலே நாம் ஒன்று சொல்லாம். அதிகமாக வியாபாரிகள் லாபம் வைத்துக்கொண்டு, அவர்கள் வரி கொடுப்பதிலிருந்து தப்பிக் கொள்கிறார்கள் அதனால் நாம் இப்படி வரி போடாமல் இருக்க முடியாது என்று அந்த சமாதானத்தைச் சொல்லாம். ஆனால், அதே நேரத்தில் லாபமே இல்லாத—லாபமே வர முடியாத—பொருள்கள்—அசந்தர்ப்பத்தினால் அழுகக் கூடிய பொருள்கள் மீது வரி விதிக்கிறோம் என்று கண்டிப்பாகக் கூறுவோமானால் எப்படி அந்தச் சமாதானம் இந்த வரிக்குப் பொருந்தும். நஷ்டம் ஏற்படக் கூடிய வியாபாரத்தில் இன்னும் வரியை வேறு போட்டால் நஷ்டம் இன்னும் அதிகப்படியாகின்றது என்பதை கவனிக்கவேண்டும். வியாபாரி, தானே கொடுக்கிறான் என்று அந்தச் சமாதானத்தை அதிகாரிகள் சொல்லலாம். பொருள் எங்கே உற்பத்தி யாகிறதோ அந்தப் பொருளை வாங்கி வியாபாரம் செய்யும்போது, ஒரு பொருள் 10 ரூபாய் என்றால் அந்த

வியாபாரி கொடுக்கவேண்டிய விற்பனை வரியையும் சேர்த்து 10 ரூபாய் என்று கணக்குப் போடுகிறான். பத்து ரூபாய்க்கு உற்பத்தியாகக் கூடிய இடத்தில் வாங்குகிறான். ஆகையால் உற்பத்தி செய்யக் கூடியவன் பாதிக்கப்படுகிறான் என்பதில் சந்தேகமில்லை.

அடுத்தபடியாக இந்த இடத்திலே டீயைப்பற்றி சற்று நான் சொல்ல வேண்டியிருக்கிறது. டீயைப் பற்றிச் சொல்லும்போது, 46-ம் பக்கத்திலே

" Tea, that is to say any one of the forms of tea in which it is sold, but not including tea drink.",

என்று குடிக்கப்படக் கூடிய டீத் தண்ணீரை தவிர மற்ற டீக்களுக்கு வரி விதிக்கிறோம் என்று 5 சத வீதம் எற்கெனவே விதித்த வரியை திருத்த மசோதாவிலே கொண்டு வந்திருக்கிறோம். இதிலே "பினிஷ்ட் குட்ஸ்" எங்கு இருக்கிறதோ—பாக்டரியில் வந்து உற்பத்தியான பிறகு சென்ட்ரல் எக்ஸைஸுக்குக் கணக்குக் காண்பித்து டியூடி கட்டிய பிறகு தான் விற்க முடியுமென்பதால் "பினிஷ்ட் குட்ஸ்" என்ற அர்த்தத்திலே வரியைப் போடவேண்டுமே தவிர, இன்றைக்கு இருக்கக்கூடிய சூழ் நிலையிலே டீ இலையைப் பரித்து வந்தாலும் அவர்களுக்கு வரியை போடுகிறார்கள். இந்த வரியைப் பற்றி நான் எற்கெனவேயே அமைச்சர் அவர்களுக்கு விண்ணப்பம் செய்திருந்தேன். பச்சை இலைக்கு வரி விதித்து விட்டு "பினிஷ்ட் குட்ஸ்" என்று அங்கும் வரி விதித்தால் "ஸிங்கிள் பாயிண்ட்" என்பதற்கு என்ன அர்த்தம். இதனால் இரண்டு வரி ஆக வில்லையா ? பச்சை இலைக்கும் வரி, டீ செய்தால் அதற்கும் வரி என்று இப்படி அங்கே 5 பர்சன்ட், இங்கே 5 பர்சன்ட் என்று மொத்தம் 10 பர்சன்ட் என்று ஆகிவிடுகிறது. அந்த விண்ணப்பம் செய்ததற்கு ஒரு பதில் கொடுத்தார்கள். பாக்டரிக்காரர்கள் தான் கொடுக்கிறார்கள், பச்சை இலைக்கு வரி கொடுத்திருந்தால் பாக்டரிக்காரர்கள் ரீபண்ட் வாங்கிக்கொள்ளலாம், அப்படி இருப்பதால் "டபிள் டாக்ஸ்" ஆகாது என்று பதில் வந்திருக்கிறது. அவர்களுக்கு இது நன்றாகப் புரியவில்லை என்பதை நான் அழுத்தந் திருத்தமாகத் தெரிவித்துக்கொள்கிறேன். சிறிய டீ தோட்டக்காரர்கள் பச்சை இலையைக் கொண்டு வந்து பாக்டரியில் போட்டுவிட்டால், அந்த முறையில் 10,000 ரூபாய்க்கு டர்னோவர் ஆகிவிட்டால், அவன் வரி கட்டியாக வேண்டும். அந்த மாதிரி இருக்கும்போது அவன் பாக்டரிக்காரனுக்கு அவன் வரி கட்டி விட்டதாகச் சொல்வானா என்று சிந்திக்க வேண்டும். அவன் சொல்லப் போவதில்லை. அவன் வரியைக் கொடுத்து விடப் போகிறான். இங்கே என்ன நிலை ? இவன் எத்தனை ஆயிரம் பவுண்டு விற்கிறானோ, எத்தனை ஆயிரம் ரூபாய்க்கு விற்கிறானோ, அத்தனை ஆயிரம் ரூபாய்க்கு அவனிடமிருந்து வரியை வசூலித்து விடுகிறோம். அந்த வரியை பாக்டரிக்காரன் கொடுத்துவிடுகிறான். ஆகையால் இது "டபிள் டாக்ஸேஷன்" ஆகிவிடாதா என்று எழுதியிருந்தேன். ஆகவே ஒரே இடத்தில் வாங்கிக்கொள்ளுங்கள், டீ உற்பத்தி செய்யக்கூடிய இடமான பாக்டரியில் வாங்கிக்கொள்ளுங்கள், இலையைப் பரித்துக்கொடுப்பவனுக்கும் வரி, டீ செய்பவனுக்கும் வரி என்று இரண்டு வரி கூடாது என்று சொன்னேன். நான் யாரோ சொல்வதை வைத்துக் கொண்டு சொல்லவில்லை. என்னையே எடுத்துக்கொள்ளுங்கள். நான் ஒரு டீ பாக்டரி வைத்திருக்கிறேன். என்னுடைய தோட்டத்திலிருந்து இலையைக் கொண்டு போய் போடுகிறேன். வருமான வரிக்காக வேண்டி கணக்குக் காட்டவேண்டியிருப்பதால் அதற்காக இலையைப் போட்டுவிடும்போது, பறித்து விற்பவன் என்ற முறையில் ஒரு வரி 5 சதவீதமும், அதே நேரத்தில் டீயாக்கி விற்கும்போது டீ விற்பவன் என்ற முறையில் ஒரு வரி 5 சதவீதமும் ஆக மொத்தம் 10 சதவீதம் வரி கொடுக்கிறேன். இது "டபிள் டாக்ஸேஷன்" என்று சொன்னால், அதிகாரிகளுக்குப் புரியாமல் போட்டிருக்கிறார்கள். இதை மறு பரிசீலனை செய்யவேண்டும். எதாவது ஒரு இடத்தில் வாங்கிக்கொள்ளுங்கள், பச்சை இலைக்குப் போட்டுக் கொள்ளுங்கள், அல்லது "பினிஷ்ட் குட்ஸ்" என்று அந்த இடத்தில் போட்டுக்கொள்ளுங்கள், அப்படி இல்லையானால், "டபிள் டாக்ஸேஷன்" ஆகும் என்று மறு முறை சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

10th February 1959] [Sri J. Matha Gowder]

அடுத்தபடியாக உருளைக்கிழங்கு, காய்கறிகளுக்கு வரி விலக்குக் கொடுக்கிறோம் என்று 1954–55-ம் வருஷ பட்ஜெட் உரையிலே சொல்லியிருக்கிறார்கள். 1954–55-லே காய்கறிகளுக்கு வரி விலக்குக் கொடுக்கிறோம் என்று சொல்லி, 1959-ம் வருஷத்திலே வரியைக் கொண்டு வந்தால் உருளைக்கிழங்கின் நிலைமை என்ன ? விலை அதிகமாக உயர்ந்து விட்டதா ? அல்லது உருளைக்கிழங்கு வியாபாரம் அதிக லாபகரமானதாக ஆகிவிட்டதா ? இதற்கான புள்ளி விவரம் அரசாங்கத்திடம் இருக்கிறதா? 1954-ல் இருந்த உருளைக்கிழங்கு வியாபாரத்தின் தரம் இன்றைக்குக் குறைந்திருக்கிறது என்று அரசாங்கத்திற்குத் தெரியும். அப்படித் தெரிந்தும்கூட உருளைக்கிழங்குக்கு வரி சுமத்தியிருப்பது நியாயம் இல்லை என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அதை வரியிலிருந்து விலக்க வேண்டும் என்று நான் திருத்தம் கொடுத்திருக்கிறேன். "விற்கக் கூடிய இடத்திலே" உருளைக் கிழங்குக்கு வரி வசூல் செய்துவிடலாம் என்று இருக்கிறது. உருளைக்கிழங்கு அதிகமாக விளையும் இடம் நீலகிரிப் பிரதேசம். அங்கே விளையும் உருளைக்கிழங்கை மேட்டுப்பாளையத்திற்குக் கொண்டுபோய், கமிஷன் மண்டியிலே போட்டு, இரண்டு மூன்று நாட்கள் பார்க்கிறான் வியாபாரி. அங்கே நல்ல விலை கிடைக்காவிட்டால், கிழங்கை மதராசுக்குக் கொண்டுவந்து விடுகிறான். இங்கேயும் நல்ல விலை கிடைக்கவில்லையானால், வேறு எங்காவது அனுப்பவேண்டுமா என்று பார்க்கிறான். எங்கே போய் விற்கிறது என்று கண்டுபிடிப்பதற்கு முடியாமல் இருக்கிறது.

சாதாரணமாக மேட்டுப்பாளையத்தில் விற்றுவிட்டுப் போய்விட்டால் வரி போட்டுவிடுகிறோம். மேட்டுப்பாளையத்தில் போடாமல், நீலகிரியிலிருந்து மதராசுக்கு வந்துவிட்டால், இங்கே ஒரு வரி போடுகிறோம். ஆனால், மேட்டுப்பாளையத்தில் விற்பனையாகக்கூடிய கிழங்கு மதராசுக்கு வந்துவிட்டால் அதற்கு அங்கே வரி போடுவதில்லை. இது எப்படியிருக்கிறதென்றால், அங்கு விற்பனை செய்து, அங்கு வாங்கப்பட்ட உருளைக்கிழங்கை மதராஸிலே போட்டால் அதற்கு ஒரு விலை. விற்பனை அங்கு செய்யாமல், நேராக இங்கே வந்துவிட்டால், அதற்கு ஒரு விலை. இரண்டு விலையாக இங்கு தடுமாற்றத்துடன் வியாபாரிகள் விற்கவேண்டிய நிலையில் இருக்கிறார்கள். இதையும் சற்று சிந்திக்கவேண்டும். இதைப் பார்க்கும்போது, அங்கு வரி போடுவது நியாயம் இல்லை என்று நல்லவிதமாகத் தெரிகிறது. இதை செலக்ட் கமிட்டியிலே பார்க்கும்போது, செலக்ட் கமிட்டி சேர்மன் அவர்கள் உறுதியளித்திருக்கிறார். செலக்ட் கமிட்டி ரிப்போர்ட்டின் 118-வது பக்கத்திலே, குறிப்பிட்டிருப்பதாவது :

"The Chairman assured the members that in regard to perishables each case would be considered on merits. Mention would also be made in the report that the question of exempting vegetables, flowers and like perishable articles from the payment of tax should be carefully examined on their merits."

"நன்றாகப் பரிசீலனை செய்து, மிக ஜாக்கிரதையாகப் பரிசீலனை செய்து நாங்கள் வரி போடுகிறோம்" என்று சேர்மென் அவர்கள் அன்றைக்கு செலக்ட் கமிட்டியில் உறுதி கூறிவிட்டு, இன்றைக்கு இப்படிச் செய்திருக்கின்றார். ஜாக்கிரதையாகப் பரிசீலனை செய்து மிக ஜாக்கிரதையாக வரி போட்டுவிட்டார் நம்முடைய அமைச்சர் அவர்கள். இதைச் சற்று சிந்தித்துப் பார்த்து, உருளைக்கிழங்குக்கு வரி போடக்கூடாது என்று நான் மிகவும் வலியுறுத்திக் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

இதில் மிகவும் நெருக்கடியான நிலை இருக்கிறது. நீலகிரியில் உருளைக் கிழங்கு விளைவிப்பவர்களாக இருந்தாலும் சரி, வியாபாரம் செய்கின்றவர்களாக இருந்தாலும் சரி, அதை லாபகரமான தொழிலாகக் கருதாமல் எவ்வளவோ கஷ்டத்தினால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். நீலகிரியிலே இருக்கும் உருளைக்கிழங்கு பயிர்செய்பவர்கள் இன்றைக்கு சாக்காரிடத்தில் எவ்வளவோ முறையீடுகள் செய்துகொண்டிருக்கிறார்கள். வாங்கிய கடனையே திருப்பிக்கொடுக்க முடியாத நிலையில்,

[Sri J. Matha Gowder] 10th February 1959]

சர்க்காருக்கு விண்ணப்பம் செய்துகொண்டிருக்கிறார்கள். இந்த நிலையிலே உருளைக் கிழங்குக்கு வரி விதிக்கிறோம் என்றால், அவர்களுடைய மனம் எந்த நிலையில் வேதனைப்படும் என்பதை நாம் சற்று சிந்தித்து, சீர்தூக்கிப் பார்க்கவேண்டும் என்று அமைச்சர் அவர்களை நான் மிகப் பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன்.

இன்றைக்கு முப்பதாயிரம் ரூபாய் வரைக்கும் நாங்கள் எக்ஸெம்ப்ஷன் கொடுத்திருக்கிறோம் என்று ஒருக்கால் சொல்லலாம். முப்பதாயிரம் வரையில் விவசாயிகளுக்கு வராது என்று சொல்லலாம். எவ்வளவு வந்தாலும், ஆயிரத்துக்குமேல் விற்கக்கூடிய விவசாயியாக இருந்தாலும் சரி, முப்பதாயிரத்துக்கு மேல் விவசாயம் செய்யக்கூடிய விவசாயியாக இருந்தாலும் சரி, மொத்தமாக அங்கிருக்கும் வியாபாரி வரி வசூல் செய்யாமல் முடியாது. முப்பதாயிரம் ரூபாய்க்கு மேல் போய்விடுகிறது, வரி கொடுத்துவிடுகிறான் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். முப்பதாயிரம் ரூபாய் என்பதை ஐம்பதாயிரம் ரூபாய் வரைக்கும் எக்ஸெம்ப்ஷன் இருக்கவேண்டும் என்று திரு. லாஸர் அவர்கள் சொன்ன மாதிரி செய்யவேண்டும். அதற்குமேல் ஒரு ஸ்லாப் ரேட் போடலாம். வரி என்று அர்த்தம் இல்லாமல், ஐம்பதாயிர ரூபாயிலிருந்து 75 ஆயிரம் ரூபாய் வரைக்கும் விற்பவனுக்கு இத்தனை ஆயிரம் ரூபாய் வரி என்று ஸ்லாப் ரேட் போட்டால் நாம் எதிர்பார்க்கக் கூடிய வரியைப் பெற்றுவிடலாம். நமக்கு விற்பனை வரியிலிருந்து இத்தனை ரூபாய் வந்தாகவேண்டுமென்ற ஒரு புள்ளி விவரம் இருந்தால், அந்தப் புள்ளி விவரத்திற்கு ஸ்லாப் ரேட் போட்டால் எவ்வளவு நமக்கு வரி வசூல் ஆகிறது என்பதை நாம் பார்ப்போமானால், ஐம்பதாயிரம் ரூபாய்க்கு விற்பனை செய்யப்போகிறவர்கள் 80 சத விகிதம் இருக்கும்போது, ஸ்லாப் ரேட் மூலமாக 20 சத விகிதம் இருக்கும் குறைந்த வியாபாரிகள் அந்த வரியை ஈடு கட்டிவிடமுடியும் என்பதைச் சற்று சிந்தித்துப் பார்த்தார்களானால், நிச்சயமாக 50 ஆயிரம் ரூபாய்க்கு எக்ஸம்ப்ஷன் லிமிட்டை உயர்த்தவேண்டும் என்று திருத்தம் கொண்டுவருவார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. இதைப் பரிசீலனை செய்து, சர்க்காரிலிருந்தே இதுபற்றி திருத்தம் கொண்டு வரவேண்டும். 50 ஆயிரம் ரூபாய் வரையில் எக்ஸெம்ப்ஷன் கொடுத்துவிட்டு, அதற்குமேல் ஒரு ஸ்லாப் ரேட் போடும் வகையில் திருத்தம் கொண்டுவரலாம் என்று நான் மிகவும் பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன். வரி போட்டுத்தான் ஆகவேண்டும் என்றால் அப்படிச் செய்யலாம். இல்லையென்றால், நிச்சயமாக வரியிலிருந்து விலக்கு அளிக்க வேண்டிய நியாயம் இருக்கிறது.

வாட்டில் பார்க்குக்கு இன்றைக்கு வரி புகுத்தப்பட்டிருக்கிறது. அதற்கும் வரி போட்டிருக்கிறோம். வாட்டில் மரங்கள் நீலகிரியிலும் மற்றப் பகுதிகளிலும் அதிகமாக உற்பத்தியாகிக்கொண்டிருக்கிறது. வாட்டில் உற்பத்தியை அதிகமாக்க வேண்டும். அந்தப் பொருள் அதிகமாகக் கிடைப்பதற்கு சர்க்கார் காடுகளிலெல்லாம் பயிரிட்டுக் கொண்டிருக்கிறோம், தனிப்பட்டவர்கள் யாராவது வாட்டில் பயிர் செய்தால், அவர்களுக்குக் கடன் தருகிறோம், பணம் தருகிறோம், பூமி தருகிறோம் என்று சர்க்கார் ஆசையை ஊட்டிவிட்டு, மேலும் வாட்டிலுக்கு வரி போடுகிறோம் என்றால், அது நியாயமா என்று கேட்கின்றேன். அவர்கள் உற்பத்தி செய்ய ஆரம்பித்திருக்கிறார்கள் ; அது லாபகரமாக இருக்குமா, இல்லையா என்று இன்னும் நிர்ணயிக்க முடியாத நிலையில் இருக்கும்போது, ஒரு பக்கத்தில் அதனைப் பயிர் செய்யும்படிச் சொல்லிவிட்டு, மறு பக்கத்தில் வரி விதித்திருக்கிறோம் என்ற முறையில் அமைந்திருக்கிறது. இது விஷயத்தில் பத்து ஆண்டுக்காலத்திற்கு மேல் பொறுத்திருந்து, அது எவ்வளவு பயிராகிறது, என்று தெரிந்து, நம் நாட்டின் தேவைக்கு போதுமானதாக இருந்து, அயல்நாட்டுக்கு ஏற்றுமதி செய்யக்கூடிய அளவு வந்துவிட்டால், அதற்கு வரி விதிக்கலாமே தவிர, இப்பொழுது நாம் வரி விதிப்பது சரியல்ல என்று நான் சொல்லிக்கொள்ளுகிறேன்.

10th February 1959] [Sri J. Matha Gowder]

இந்த மசோதாபற்றி ஸ்ரீ பாலகிருஷ்ணன் என்பவர், உருளைக்கிழங்கு பயிர் செய்கின்றவர்களுடைய நிலைமையை நன்றாகத் தெரிந்தவர், செலக்ட் கமிட்டியில் சாட்சியம் சொல்லியிருக்கிறார். அவருடைய சாட்சியத்தின் விவரம் 155-ம் பக்கத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனால், அவருடைய சாட்சியத்தை ஏற்க முடியாமல் விட்டுவிட்டார்கள். உருளைக்கிழங்கு வியாபாரி ஏதோ தன்னுடைய லாபத்தைக் கருதிச் சொல்லியதாக செலக்ட் கமிட்டியார் எண்ணிவிட்டார்களோ என்று புரியவில்லை. அவர் தம்முடைய சாட்சியத்தில் நன்றாகப் புள்ளி விவரம் கொடுத்திருக்கிறார். அதைச் சற்று பரிசீலனை செய்திருந்தால், உருளைக் கிழங்குக்கு வரி விதிப்பது நியாயம் அல்ல என்று நீங்களே முடிவு செய்திருப்பீர்கள். ஆனால், இது ஏன் கவனிக்கப்படவில்லை என்று தெரியவில்லை. நான் கொடுத்திருக்கும் திருத்தம் வரும்போது அதைப் பற்றி சொல்கிறேன். அதையும் அமைச்சர் அவர்கள் பரிசீலனை செய்து இதற்கு விதிவிலக்கு கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

SRI N. K. PALANISAMI: கனம் சபாநாயகர் அவர்களே, இன்றைய தினம் சர்க்கார் கொண்டுவந்திருக்கும் மசோதாவில் முக்கியமாக வரவேற்கும் அம்சம், சேல்ஸ் டாக்ஸ் ஆக்ட், டர்னோவர் அண்டு அஸெஸ்மெண்ட் ரூல்ஸ், ஜெனரல் சேல்ஸ் டாக்ஸ் ரூல்ஸ் ஆகிய இந்த மூன்றையும் ஒன்றாக இணைத்து ஒரே பகுதியாகக் கொண்டுவந்திருப்பதுதான். வரி வசூலிக்கும் அதிகாரிகளுக்கு இன்றைக்கு இருக்கும் அதிகாரத்தைவிட அதிகப்படியான அதிகாரம் இந்த மசோதாவில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. வரி வசூலிக்கக்கூடிய முறையிலும், வியாபாரிகளிடமிருந்து கடுமையாக வசூலிக்கக்கூடிய முறையிலே சட்டங்கள் திருத்தப்பட்டிருக்கின்றன. இந்தச் சபையிலே பல வருஷங்களாக நாம் பேசிவந்திருக்கிறோம். வியாபாரிகளும் சர்க்காரைப் பார்த்து அடிக்கடி தங்களுடைய குறைகளை எடுத்துச்சொல்லியிருக்கிறார்கள். ஒவ்வொரு சமயத்திலும் பதில் சொல்லும்போதெல்லாம், "நாங்கள் வரி விசாரணைக்கு ஸ்பெஷல் ஆபீசர்களை நியமித்திருக்கிறோம்; அவர்கள் பரிசீலனை செய்துகொண்டிருக்கிறார்கள்; அவர்கள் ரிப்போர்ட் சமர்ப்பித்தவுடன் எல்லாம் கவனிக்கப்படும்" என்று சொல்லிவிட்டு, உண்மையாகவே அவர்கள் ஒரு சிபார்சை சமர்ப்பித்ததற்குப் பிறகு, அந்த அடிப்படையிலே இங்கிருக்கும் ஷரத்துக்களைக் கொண்டுவராமல், அவர்களுக்கு வேண்டியதை மட்டும் கொண்டுவந்து, உண்மையாக வியாபாரிகளுக்கு ஏற்படக்கூடிய கஷ்டங்களைப் போக்கக்கூடிய நிலைமையிலே இந்த ஷரத்துக்களைக் கொண்டுவராதது மிகவும் வருந்தத்தக்கது. அப்படியிருக்க, ஸ்பெஷல் அதிகாரிகளை இதற்காக ஏன் நியமிக்கவேண்டும்? அவருடைய சிபார்சை ஏற்றுக்கொள்ளாவிட்டால், அவரை ஏன் நியமித்து, இதைப் பரிசீலனை செய்து ஒரு ரிப்போர்ட் தரும்படி சர்க்கார் ஏன் கேட்கவேண்டும் என்பது எனக்குப் புரியவில்லை.

ஏற்கெனவே, பத்தாயிரம் ரூபாய் டர்னோவர் இருந்தால், அதை டாக்ஸ் பிள் லிமிட்டாக வைத்திருந்தார்கள். மசோதா பப்ளிஷ் ஆனபோது அதை ஐயாயிரம் ரூபாயாகக் குறைத்தார்கள். மறுபடியும் பத்தாயிரம் ரூபாயாக உயர்த்தியிருக்கிறார்கள். பாலைவனத்தில் பாரத்தைச் சுமந்து செல்லும் ஒட்டகத்தின் முதுகில் நிறைய பாரத்தையும் வைத்து, அத்துடன் இரண்டு கற்களையும் வைப்பார்கள். அது புறப்படுவதற்கு முன்னால் அந்தக் கற்களைத் தூற எறிந்துவிடுவார்கள். பாரம் குறைந்துவிட்டது என்று நினைத்து ஒட்டகம் தன்மேல் இருக்கும் பாரத்தைச் சுமந்துகொண்டு தன் பிரயாணத்தைத் துவக்கும். அதுபோலத்தான் இருக்கிறது நம்முடைய சர்க்காரின் செய்கையும்.

வரி போடுவதற்கு முன்னால், அந்த வரியை யார் பேரில் போட வேண்டும் என்று சர்க்கார் நன்றாக உணர வேண்டும். டாக்டர் லோகநாதன் அவர்களே சொல்லியிருக்கிறார்கள். ஐம்பதாயிரம் ரூபாய்க்கு மேலே

டர்னேவர் இருக்கிறவர்களிடமிருந்து 85 சதவிகிதம் வரி வருகிறது என்று. ஆனால், அப்படிப்பட்டவர்கள் இன்றும் தப்பித்துக்கொண்டுதான் இருக்கிறார்கள்.

உதாரணமாக இன்றைய தினம் கொத்தவால் சாவடிக்குச் சென்று பார்த்தால் தெரியும். வாஷிங் சோடாவின் கண்ட்ரோல் விலை 21 ரூபாய் என்று இருக்கிறது. ஆனால் 45 ரூபாய் கொடுத்தால்தான் கிடைக்கும். இன்றைக்கு 5 லட்சம் மூட்டை வேண்டுமானாலும் கிடைக்கும். ஆனால் 21 ரூபாய்க்கு வாங்கவேண்டுமென்று சென்றால் ஒரு மூட்டை கூடக் கிடைக்காது. இப்படிப்பட்ட பதுக்கல் வியாபாரிகளை எல்லாம் கண்டுபிடித்து வரி வசூலிப்பதுதான் நியாயம். இதற்குச் சர்க்கார் தகுந்த நடவடிக்கை எடுப்பார்கள் என்று நம்புகிறேன். "கம்பௌண்டிங்" க்ளாஸ் இருக்கிறது. இது நல்ல அம்சம். இதிலே பத்தாயிரத்துக்கு மேல் பதினையாயிரம் வரையில் வருஷத்திற்கு 120 ரூபாய் என்றும், பதினையாயிரத்திற்கு மேல் இருபதாயிரம் வரை 180 ரூபாய் என்றும், இருபதாயிரத்திற்கு மேல் இருபத்தி ஐயாயிரம் வரையில் 240 ரூபாய் என்றும் மாக்சிமம் லிமிட் வைத்திருக்கிறார்கள். இதில் ஒரு சிறு விஷயம். ஒரு வியாபாரி கம்பவுண்டிங் பண்ணி வரி கட்ட வேண்டுமென்று விரும்பினாலும் இதற்கு அதிகாரிகளின் பர்மிஷன் வேண்டும். பர்மிஷன் இல்லையென்றால் இல்லை. அதற்கு அப்பீல் கிடையாது. இது மோசமான முறை. ஓர் அதிகாரி பர்மிஷன் கொடுக்காவிட்டால் அதன் மேல் அப்பீல் பண்ணிக்கொள்வதற்கும் இடம் இருக்க வேண்டும். ரெக்கார்டு பூர்வமாக அந்த வியாபாரி ஏற்கனவே சில குற்றங்களை செய்தவர் என்பதற்கு ஆதாரம் இருந்தால் வேண்டுமானால் கம்பவுண்ட் பண்ண பர்மிஷன் கொடுக்க அதிகாரி மறுக்கலாம்.

THE HON. SRI R. VENKATARAMAN : அதிகாரி பர்மிஷன் கொடுத்தால்தான் கம்பவுண்டிங் பண்ணலாம் என்று இந்தச் சட்டத்தில் எந்த இடத்தில் இருக்கிறது என்று தெரியவில்லை.

SRI N. K. PALANISAMI : ஒரு முனை வரி என்று சொல்லப்படுகிறது. ஒரு கடையில் பல சாமான்கள் இருக்கும். ஒரு முனை விற்பனை வரி 5 சதவிகிதம், 7 சத விகிதம் என்று துணிகள் முதலியவைகளுக்கு விதிக்கப்படுகிறது. இன்னும் சில பொருள்களுக்கு 2 சத விகிதம் வரி விதிக்கப்படுகிறது. பல சாமான்கள் வைத்திருக்கும்போது ஒரு முனை வரி கட்டுவார்களா ? அல்லது பல கட்ட விற்பனை வரி கட்டுவார்களா ? ஒரு முனை வரியாக இருந்தாலும் சரி, இரு முனை வரியாக இருந்தாலும் சரி அது பல கட்ட விற்பனை வரியில்தான் கணக்கு வரும். "Single point tax" என்பதற்கு அர்த்தம் இல்லாமல் போய்விடுகிறது. இந்த லைசென்ஸ் விஷயத்தில் 7,500 வரை லைசென்ஸ் வேண்டியது அவசியம் இல்லை. அந்த லிமிட்டைப் பத்தாயிரத்திற்கு உயர்த்த வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

சாதாரணமாக 100 ஆடு விற்றால்கூட "காஷுவல் ட்ரேடர்" என்று அவரைத் தீர்மானித்துவிடலாம். இந்த ஒரு க்ளாசை வைத்துக்கொண்டு அந்த வரி விதிப்பு அதிகாரி என்ன வேண்டுமென்றாலும், எவ்வளவு தொந்தரவு வேண்டுமென்றாலும் செய்யலாம். "Appellate Tribunal" முடிவுதான் கடைசியாக இருக்கிறது. அதற்குப் பிறகு ஹைகோர்ட்டுக்குத்தான் வரவேண்டும். அதிகாரி ஏதாவது சொல்லிவிட்டால் கடைசிவரை அவர் வார்த்தைதான் நிற்கும். இந்த மாதிரி "காஷுவல் ட்ரேடர்களை" எல்லாம் சேர்ப்பது சரியாகாது.

THE HON. SRI R. VENKATARAMAN : There is no levy of tax on the casual dealer.

SRI N. K. PALANISAMI : அடுத்தது "பெஸ்ட் ஆப் ஜட்ஜ்மெண்ட்" பற்றி நான் இதே சபையில் எதிர்த்து வந்திருக்கிறேன். ஐம்பதாயிரத்திற்கு மேல் இந்த பெஸ்ட் ஆப் ஜட்ஜ்மெண்ட் வராது என்று

லோகநாதன்கூட சிபாரிசு செய்திருக்கிறார்கள். அது ரொம்ப பாதிக்கும். அது அறவே கூடாது. 50 ஆயிரம் ரூபாய்க்கு மேல் டர்ன் ஓவர் இருக்கிறவர்களுக்கு வேண்டுமானால் இம்மாதிரிப் போடுவதைப் பற்றி ஆலோசிக்கலாம். இப்போது முக்கியமான மாற்றம் என்னவென்றால், வரி விதித்தவுடன் அதை ஆட்சேபிப்பதாக இருந்தால் அது தவறு என்றோ அல்லது நியாயம் என்றோ நிரூபிக்க வேண்டிய பொறுப்பு சர்க்காரிடம் இருந்ததை மாற்றி வியாபாரிகளுக்கே விட்டுவிட்டார்கள். ஒருவன் அரிசி மூட்டையைத் தன் ஊருக்குக் கொண்டு போகிறபோது அவன் அதை விற்கிறான் என்று சொல்லி ஒரு அதிகாரி வரியைப் போட்டு விட்டால் தான் விற்கவில்லை என்பதை அந்த வியாபாரி இன்று நிரூபித்தாக வேண்டும். இந்த அதிகாரிகளுக்குப் பயந்துகொண்டு அவனுக்கு யார் சாட்சி சொல்ல வருவார்கள் ? ஆகவே "ப்ரூவ்" பண்ணவேண்டிய பொறுப்பு சர்க்காரிலேயே இருந்தால்தான் சவுகரியமாக இருக்கும். அதனால் "பர்டன் ஆப் ப்ரூப் டீலர் செய்ய வேண்டுமென்று இருப்பதை மாற்றி சர்க்காரே அந்தப் பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். சாதாரணமாக ஒரு மாஜிஸ்ட்ரேட்டிடம் போய் அந்த வரி விதிக்கக்கூடிய அதிகாரி இந்த வியாபாரி இவ்வளவு பணம் கட்டவேண்டுமென்று கொடுத்துவிட்டால், உடனே அவர் போலீஸ்காரனை அனுப்பி சாமான்களை எடுத்து வசூல் செய்து விடுகிறார். விசாரணை செய்வதுகூடக் கிடையாது. இது ரொம்பக் கடுமையான முறை. இதை எல்லாம் தளர்த்தி வியாபாரிகளுக்குக் கொஞ்சம் வசதி செய்ய வேண்டும். இப்போது ஒவ்வொரு கட்டத்திலும் லஞ்சம் அதிகமாவதற்குத் தான் சந்தர்ப்பம் நிறைய இருக்கிறது. இதைத் தடுக்க கண்டிப்பான முறையில் கண்காணிக்க வேண்டும். இன்னும் "ஹாரஸ்மெண்டை" எடுத்துக்கொண்டால் அவ்வாறே அதிகாரிகள் சிறிய வியாபாரிகளுக்குத் தொந்தரவு கொடுக்கிறார்கள். சிறிய வியாபாரிகள் தவறுதல் செய்தாலும் கூட அவர்களுக்கு இந்த மாதிரி "ஹாரஸ்மெண்ட்" உடனே பறிமுதல் செய்வது, ரெக்கார்டுகளை எடுப்பது போன்ற முறை இருக்கிறது. இது அவர்களைப் பாதிக்கும் முறையில் இருக்கிறது. "பிசினஸ் கம் ஹவுஸ்" இருக்கிற இடங்களில் அதிகாரிகள் வீட்டுக்குள் நுழைந்து ரெக்கார்டுகளைக் கொண்டுவர மாஜிஸ்ட்ரேட் பர்மிஷன் வேண்டும். அவசியம் இந்த மாதிரியான தொந்தரவு இருக்கக்கூடாது. இன்றைக்கு மிளகாயை எடுத்துக்கொண்டால் கொத்தவால் சாவடிக்கும் கோடவுன் ஸ்ட்ரீட்டுக்கும் போட்டி. கொத்தவால் சாவடியில் லட்ச கணக்காகப் பிஸினஸ் நடக்கிறது. சென்னையிலேயே பெரிய பெரிய விற்பனை அதிகாரிகள் எல்லாம் இருக்கிறார்கள். இருந்தும் லட்சக் கணக்கில் வியாபாரம் செய்யும் கொத்தவால் சாவடி வியாபாரிகளைப் பிடித்து இவர்களால் வரி போட முடியவில்லை. போய் யாரையாவது ஒருவரைப் பிடித்தால் அவர் மண்டலக் காங்கிரஸ் கமிட்டி பிரசிடெண்ட் ஆகவோ, தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியைச் சார்ந்தவராகவோ இருப்பார். அவரை என்ன செய்வது ? இப்படிப்பட்ட நிலை நீடிக்கக்கூடாது. எந்தக் கட்சியைச் சேர்ந்தவராக இருந்தாலும் வியாபாரம் என்று வருகிற போது சர்க்காருக்குச் சேரவேண்டிய வரிப் பணத்தை சரியான முறையில் வசூல் செய்ய நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும். "டாக்ஸ், எவேஷனுக்கு" இடம் இருக்கக்கூடாது.

இன்னும் உணவுப் பொருளுக்கு வரி போட்டதை எதிர்க்க வேண்டிய 12-20
தாக இருக்கிறது. சிலவற்றுக்கு விதிவிலக்கு அளித்துவிட்டு, சிலவற்றுக்கு p.m.
மட்டும் ஏன் வரி போடவேண்டுமென்பது தெரியவில்லை. மின்சார சாமான்களை எடுத்துக்கொண்டால் பம்பாயில் 4 சத விகிதம் போடுகிறார்கள். இங்கே 6 சத விகிதம். அதனால் பம்பாயிலிருந்தே நேரிடையாக ஒரு சத விகிதம் இண்டர் சேல்ஸ் டாக்ஸ் கூடக் கட்டிவிட்டு வாங்கி இங்கே கொண்டு வந்துவிடுகிறார்கள். அதேமாதிரி மூங்கில் போன்றவற்றுக்கு 3 சத விகிதம் வரி போடுகிறோம். பக்கத்து மலபார் போன்ற இடங்களில் இருந்து ஒரு சத விகிதம் இண்டர் சேல்ஸ் டாக்ஸ் கட்டிவிட்டு அவைகளைக் கொண்டுவந்துவிட முடியும். இதனால் எல்லாம் வடநாட்டு வியாபாரம் பெருகும். நம்நாட்டு வியாபாரம் குறையத்தான் செய்யும். ஆடம்பரப் பொருள்களுக்கு அதிக

[Sri N. K. Palanisami] [10th February 1959

வரி போடுவதை ஆட்சேபிக்கவில்லை. ஆனல் வெஜிடபிள் ஆயிலுக்கு 3 சத விகிதம் போட்டிருக்கிறது. அதையும் குறைக்கவேண்டும். கெமிகல் பர்டிலிசைர்ஸ்களுக்கு 3 சத விகிதம் வரி போடப்பட்டிருக்கிறது. அவற்றுக்கு வரியே கூடாதென்பது என் கருத்து. இதைப்பற்றியெல்லாம் ஷரத்துவாரியாக விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளும்போது பல திருத்தங்கள் கொடுத்துப் பேச விரும்புகிறேன். அந்தத் திருத்தங்களை எல்லாம் ஆலோசனை செய்து எற்றுக்கொண்டு வியாபாரிகளுக்குச் சாதகமாக இருக்கக்கூடிய முறையில் இம்மசோதாவைத் திருத்தி அமைக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

* SRI M. J. JAMAL MOIDEEN : Mr. Speaker, Sir, on the whole I think, the Report of the Select Committee is commendable. I would also like to congratulate the Government and the Select Committee for having reduced the tax on foodgrains to one per cent. But we are looking forward to a day when these foodgrains and perishable articles and also edibles will be exempted from any taxation. I am quite sure that even if these things are exempted and the tax structure is properly readjusted, it will not affect the quantum of the tax. It can be adjusted like that. Anyway, I think, before long the tax on foodgrains and perishable articles should be abolished. I would like to quote one incident here. When we started the Independence struggle under Mahatmaji, the first thing he tackled was the tax on salt. Of course, the salt satyagraha was introduced by him to get mass appeal but at the same time he had given us a dictum that absolute necessities of life should not be taxed and it is inherently wrong to tax such necessities of life. If we extend the same dictum, foodgrains, vegetables and other perishable articles, edibles and fertilisers should be exempted from any taxation. The Government may feel that the quantum of tax will be reduced. I do understand that without income it is not easy to carry on the Government but at the same time it can be readjusted in such a way that the quantum is not affected. I once mentioned in this august House that in some countries there was a purchase tax of even 100 per cent and the people did not feel it. But here even if it is two per cent, it is felt because the structure is such. So, the whole structure will have to be readjusted in such a way that reliefs are given.

Sir, the sales tax in our State and, as a matter of fact in other States also, is introduced as a tax of revenue but at the same time it could be utilized for encouraging local industries and also for earning foreign exchange and reducing their expenditure. It can be adjusted like that. For instance, in England, after the war they levied a purchase tax of 100 per cent even on things like apparel and cloth when they were used within the country. When they were delivered on board the steamer, they were exempted. Like that, this tax also can be utilized for encouraging local industries and basic industries and earning foreign exchange. So, there also a lot of thought has to be bestowed and I am sure the Government will do that. I would like to point out one factor here. I do not want to go into details. I find that since Independence, business people and traders are always treated as some unsocial elements. I think it is not correct to adopt such an attitude

10th February 1959] [Sri M. J. Jamal Moideen]

They are also citizens of this country and they are also children of this soil. They are entitled to a fair treatment. Here I can quote an example of what is happening in a home. When one always mistrusts a child, it loses confidence. It becomes a bad character. But when he trusts the child, it improves its character. So, also businessmen and traders should be taken into confidence. But they are not taken into confidence, I am sorry to make that observation. That is the feeling and I should think that it is a correct feeling. They are always considered as some undesirable people. I am told very often that business people, middlemen, are an evil but they are a necessary evil. Without them it is not possible for even an agriculturist to reach the consumer with his agricultural product directly. It is necessary to have a businessman or an intermediary. If we consider him to be even a necessary evil, then sufficient protection should be given. I am sure, if we take these people into our confidence, they will just see that the quantum of tax is obtained. At the same time they will give us the necessary data for readjusting the tax structure. So the Government will have to consider that aspect of the matter also. As a matter of fact, most of the tax is derived from these people and if they are not taken into confidence, it is really difficult to collect the tax. I can also tell the Government that trust always begets trust and respect. Mistrust always begets fear and evasion. If only the commercial community is evasive and is afraid, I think the treatment meted out to them is responsible to a great extent. 12-30 p.m.

Coming down to my own industry, the tanning industry, it is sharing the unenviable fate. Unlike all other industries, the tax, as far as raw skins and hides are concerned, is a tax on the industry and not either on the purchase point or sale point. When I buy raw skins, I do not have to pay the tax. Neither the seller has to pay tax. But when I put the skins into soaks, and I want to tan them, at this point I am taxed. It is the industry that is taxed. I made this point some time back also. The same thing is extended to wattle bark and dyeing materials also. This means that the industrialists suffer. It is a tax on the industry and not on the purchase or sale, as is the case in respect of all other commodities. Why this particular industry is given this treatment? Perhaps because it is thought that the people connected with this industry are docile or the Government think that they can be made to be docile. I do not think there is any other explanation possible. I do not find such treatment is meted out to other industries.

Then, Sir, this industry is concentrated in our State. We get raw materials from other parts of the country. It is one of the largest foreign exchange earners. I can also tell you that in spite of the fact that this industry has established itself in this State for more than a century, we do not find any outstanding figure in this industry for this reason, namely, we have to depend entirely upon foreign markets. Our consumption of higher classes of goods

is negligible in the country. Our fate fluctuates with the fluctuations of the economic conditions of foreign countries. Skins and hides being world commodities, their prices are controlled by world conditions. It is always a buyers' commodity and not a sellers' commodity. We are not able to fix our prices as any other industry does. We have to sell at prices offered by foreign countries. So the taxation is definitely on the industry. I do not know when the Government will see through this aspect of the question and give us some relief.

There is another item included in the list, and that is wool. Three per cent tax is levied on it. I was under the impression that our Government were anxious to foster the drugget industry, and they have put up some construction in Vinnamangalam and other places. I do not know how, when they want to give all sorts of encouragement to this industry, they can put a tax on wool, which will be mostly consumed by the drugget industry or the small carpet manufacturers in the country.

Then, Sir, I come to wattle bark. It already bears an import duty of five per cent in the case of wattle bark and ten per cent in the case of extract, there is this additional tax of three per cent. I am afraid this tax will be a heavy burden on the industry. The point is shifted to the industry and not to the purchase or sale point. As I have said earlier, it is because the Government think that it is easier for collection from the tanners.

Then, Sir, I just want to mention one other point. There is the power for *suo motu* revision for assessed tax in the hands of the Commercial Tax Officer or in the hands of the Board. It may be all right. But at times it so happens, when an appeal is pending with an appellate authority, a *suo motu* revision is made. That means that the appeal has to be given up and then again another appeal has to be filed. The Government will have to do something to see that *suo motu* revision is not resorted to when an appeal is pending. After the appeal is disposed or before the appeal is filed, they can have this *suo motu* revision, and they can do this for five years.

In the case of first appeals, whether it is the Commercial Tax Officer, or the Deputy Commissioner, or the Board, stay should be granted without asking for any bond. In the case of second appeals, they can ask for bonds or security. In the case of first appeals, such conditions as asking bonds or security, should not be resorted to. In the case of first appeal, stay should be granted.

There is one clause, namely, clause 19 newly introduced. Under this clause, the tax could be collected from the property of the partners. It is a known fact that under the Civil Procedure Code and also under the Partnership Act that every partner of a business is liable for the debts of the firm. The assets of the individual partners have to be taken and distributed only after the dissolution or after exhausting the assets of the partnership.

10th February 1959] [Sri M. J. Jamal Moideen]

That provision is already there under the Partnership Act and also under the Civil Procedure Code. Therefore, I think that this clause is redundant, unless it seeks to say that even before the company is dissolved, the partners can be proceeded against. That is what it amounts to. This is another instrument of harassment. It will work like this. Suppose there are four partners and the firm is not able to pay the tax when it is demanded. Suppose one of the partners happens to be a rich man. The officer without caring to collect the tax from the company's assets would proceed directly against that particular rich partner and get his property entangled. I think this will be another instrument for harassment. In my own constituency there were people who went to a house for seeing whether account books were hidden there. Some such thing might happen now also. If the Government see the force of my argument, they can just modify this provision.

One other point with regard to the quality of the officers. I do not say that the quality of the officers is anything wrong. But then sales tax administration is rather a complicated affair. Now most of these officers are drawn from the Revenue Department, like Tahsildars, Revenue Officers and so on. Of course they have been accustomed to collect a fixed or determined tax. They have now to interpret the law. For this they must have legal background. Then only they will be able to administer the Act properly. I would suggest that some training, just like the I.A.S., but not a rigorous training, about six months or a year should be given to the officers who are newly recruited, unless they are law graduates. I think the Hon. Minister will kindly consider this suggestion.

I am not of course proposing any amendments. If, however, the Government feel that I have made some points and that I have made some useful suggestions in the course of my speech, it is for the Government to bring forward the necessary amendments to give effect to my suggestions. With these few words, I commend this Report to this August House. 12-40 p.m.

Sri T. L. SASIVARNA THEVAR : கனம் சபாநாயகர் அவர்களே, நமது சர்க்கார் கொண்டுவந்திருக்கும் விற்பனை வரிச் சட்டத்தின் மீது ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். நம் நாடானது உலகத்திலேயே மிக எளிமையான நாடு என்று சொல்வார்கள். அதே சமயத்தில் நமது அரசாங்கம்தான் உலகத்திலேயே ஜாஸ்தியாக வரி போடுகிறது. அப்படியிருந்தும் நாம் எளிமையாகத்தான் இருக்கிறோம். வரிவிதிப்பிலே உயரத்திலே இருக்கிறோம். இது எப்படி ஒத்துப்போகிறது என்று தெரியவில்லை. ஐந்தாண்டுத் திட்டம் இருக்கிற காரணத்தினால் மேலும் மேலும் வரி போட்டுக்கொண்டே போகிறார்கள்.

விற்பனை வரி சம்பந்தமாக டாக்டர் லோகநாதன் அவர்கள் ரிபோர்ட் சமர்ப்பித்திருக்கிறார். இதில் அவர்கள் சொன்ன சிபார்சின்படி வரி விதிப்பதினால் சர்க்காரின் வருமானம் எந்த விதத்திலேயும் பாதிக்காது என்று குறிப்பிட்டிருக்கிறார். அப்படி குறிப்பிட்டிருந்தும் அரசாங்கத்தார்தான் சொன்ன சிபார்சுகளை ஏற்றுக் கொள்ளாத நிலைமையில் வரியை உயர்த்தியிருக்கிறார்கள். அவர்கள் சொல்லும் காரணம் டாக்டர் லோகநாதன் சொல்லுகிற சிபார்சுப்படி செய்தால் ஏற்கெனவே இருக்கிற வருமானம்

[Sri T. L. Sasivarna Thevar] [10th February 1959

குறைந்துவிடும் என்பதாகும் அரசாங்கத்தின் புள்ளி விவரக் கணக்கு இருக்கிறது. விற்பனை வரி மூலமாக இதுவரையில் எவ்வளவு வருமானம் கிடைத்திருக்கும் என்பதற்கு அரசாங்கத்திலே புள்ளி விவரம் இருக்கும். இந்தப் புள்ளிவிவரங்களை மேற்கொண்டு டாக்டர் லோகநாதன் சொல்லும் சிபார்சுப்படி வரும் வருமானத்தைக் கணக்கிட்டால் உண்மையிலே வருமானம் குறைகிறதா, உயர்கிறதா என்று தெரிந்து கொள்ளலாம்.

சில்லரை வியாபாரிக்கு ஜாஸ்தி தொந்திரவு இருக்கக்கூடும். அவர்களுக்குப் போதுமான பாதுகாப்பு இருக்கவேண்டும் என்பது மிக்க அவசியம்.

(Sri R. Subramaniam in the Chair)

முன்பு வரி விதிக்கும் அளவு ஐயாயிரத்தில் இருந்தது. இப்போது பத்தாயிரத்துக்கு வந்திருக்கிறது. அது மிகவும் குறைச்சலான தொகை. என் தொகுதி சம்பந்தப்பட்டவரை ஒரு சம்பவத்தை சொல்லுகிறேன். எங்கள் ஊரில் ஒருவருக்கு ஒரு சிறு கடை இருக்கிறது. அங்கு ஒரு கதவுதானுண்டு. ஒரு ஆள்தான் அந்தக் கடைக்குள் இருக்க முடியும். திடீரென்று அந்தக் கடையைப் பார்க்க அதிகாரி ஒருவர் வந்தார். அவரை தூரத்திலிருந்து பார்த்தபோதே கடைக்காரர் அந்தக் கடையை அப்படியே விட்டுவிட்டு ஓடிவிட்டார். அந்தக் கடையில் மூன்று நான்கு ரூபாய்க்கு வியாபாரம் இருக்கும். ஏன் அப்படி அந்த அதிகாரியைக் கண்டு பயப்பட வேண்டும் ? ஏனென்றால் ஜாஸ்தியாக வரிபோடக்கூடிய அதிகாரம் அவருக்கு உண்டு. அதே சமயத்தில் பொய் கணக்கு வைத்து அதிகாரிகளை ஏமாற்றும் பெரிய வியாபாரிகளும் உண்டு.

சமீபத்தில் ஒரு பெரிய வியாபாரி ஆயிரக்கணக்கான ரூபாய்க்கு சாமான் வாங்கினார்கள். ஆனால் விற்பனைவரி கொடுக்காமல் ஏமாற்றுகிறார்கள். அரசாங்கத்திற்கு கொடுக்கும் பணத்தை ஒளிக்கக்கூடாதென்று உபதேசம் செய்தால் கேட்பதில்லை. கேட்டால் வரி அதிகமாக இருக்கிறதென்று சொல்லப்படுகிறது. பொதுவாக வியாபாரிகள் வரிகொடுக்கத் தயாராக இருக்கிறார்கள். குறைவான அளவிற்கு வரி விதித்தால் அவர்கள் ஏமாற்றுவதற்கு முயற்சி செய்யாமல் வரியை செலுத்துவார்கள். இதனால் அரசாங்கத்திற்கு பணம் ஜாஸ்தியாக கிடைக்கும். இதை ஒரு வருஷத்திற்கு பரீட்சை செய்து பார்த்தால் அதிக வருமானம் கிடைக்கும். வரியை உயர்த்துவதன் காரணமாக வரி கொடுக்காமல் டிமிக்கி கொடுக்கப்பார்க்கிறார்கள்.

சிறு வியாபாரிகள் சம்பந்தப்பட்டமட்டில் இந்தத் தொந்தரவு இருக்கிறது. கடற்கரையில் மல்லாக்கொட்டை வியாபாரம் செய்கிறவன் கூட, 30 ரூபாய், 35 ரூபாய்க்கு இரண்டு மணி நேரத்தில் விற்றுவிடுவான். மதுரை போன்ற ஊர்களில் கத்திரிக்காய் மூட்டை ஒன்றுக்கு, மிளகாய் மூட்டை ஒன்றுக்கு 24 ரூபாய் வருகிறதென்றால் இதிலிருந்து இரண்டு மூன்று ரூபாய் லாபம் கிடைக்கும். அவர்களுக்கெல்லாம் விற்பனை வரி தொந்தரவு கொடுக்க வேண்டியிருக்கிறது.

விதிவிலக்கு சம்பந்தப்பட்ட மட்டில் செலக்ட் கமிட்டியே அதற்கு ஒரு சத விகிதம் வரி போடலாம் என்று முடிவுசெய்தது. உணவுப்பொருள்களுக்கு வரி போடுவது என்பது பெரிய பாவம், பாவம், பாவம். உணவுப் பொருள் விலைவாசியைப் பற்றித்தான் கவர்னர் உரைமீது பேசினோம். நாட்டிலே பஞ்சம் இருக்கிறது. நியாயவிலைக் கடைகள் திறக்கப் போகிறோம் என்று சொல்லப்படும் இந்த நேரத்தில் உணவுப் பொருள்மீது வரி விதிப்பது கொஞ்சம்கூட ஒத்துக்கொள்ளக்கூடாத விஷயம். எனவே, அரசாங்கத்தார் பெரிய மனதுடன் உணவுப்பொருள் மீது இருக்கும் வரியை நீக்கவேண்டும்.

அதேபோல் அழுகக்கூடிய பொருள்களுக்கு ஏற்கெனவே வரி விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. செலக்ட் கமிட்டியிலிருந்து வந்திருக்கிற இந்த மசோதாவில் இந்த விதிவிலக்கு காணப்படவில்லை. எனவே உணவுப்

பொருள் பொறுத்தவரையில், காய்கறிகள் எல்லாம் மக்களுக்கு தேவையானபடியால் அரசாங்கம் இந்தப் பொருளுக்கு வரி விதிக்காமல் இருந்தால் அவர்களுக்கு வசதி செய்து கொடுத்தவர்கள் ஆவார்கள்.

காய்கறி வியாபாரம் சம்பந்தப்பட்ட மட்டில் பெரும்பாலும் பெண்கள் தான் வியாபாரம் செய்கிறார்கள். ஏதோ ஒன்று இரண்டு மொத்த வியாபாரிகள் ஆண்களாக இருக்கலாமே தவிர சிறு சிறு வியாபாரிகளாக இருப்பவர்கள் 80 சத விகிதம் வியாபாரிகள் தாய்மார்கள் என்றுதான் சொல்லலாம். அவர்களும் விற்பனை வரி செலுத்தவேண்டுமென்றால் அவர்களுடைய நிலைமைக்கு அது ஜாஸ்தியாக இருக்கிறது. சாதாரணமாக கணக்கு வைத்துக்கொள்வது என்பது ஆண்களுக்கே சற்று சங்கடம் என்றால், பெண்களுக்கு இன்னும் எவ்வளவு கஷ்டம் ஏற்படும் என்பதை சொல்லவேண்டியதில்லை. ஆகவே, காய்கறி முதலிய அழுகக்கூடிய பொருள்களுக்கு வரி விதிவிலக்கு அளிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். 30,000 ரூபாய் என்பது அவர்களுக்கு மிகவும் குறைவான தொகை என்று நான் முன்பே சொன்னேன். ஒரு ஸ்திரீ 150 ரூபாய்க்கு வியாபாரம் நடத்தலாம். அப்போதுகூட அவளுக்கு அதிக லாபம் வராது. மேலும், ஒரு ஸ்திரீ சிறு கடை—சில்லறைக் கடை—வைத்து வியாபாரம் நடத்தும் போது அவள் யாரிடம் விற்பனை வரியை வசூலிக்க முடியும்? அவள் எப்படி விற்பனை வரியை வசூலிக்க முடியும்? ஆண்கள் பில்கள் வைத்துக் கொண்டிருப்பார்கள். ஆண்கள் பில்கள் கொடுப்பார்கள். தாய்மார்கள் அவ்வாறு செய்ய முடியாது. தாய்மார்கள் பில் கொடுத்து வரிப் பணத்தை வசூலிக்க முடியாது. ஆகையால், 30,000 ரூபாய்க்கு விதிவிலக்குக் கொடுக்கப்பட்டிருந்தாலும், பரிபூரணமாக விதிவிலக்கு அளிக்கப்பட வேண்டிய பொருள்கள், பழங்கள் போன்ற சீக்கிரம் கெட்டுப்போகும் பொருள்களுக்கு ஏற்கனவே விலக்கு அளிக்கப்பட்டிருந்தது. எனவே இந்தச் சலுகை ஏற்கனவே இருக்கிறது. ஏற்கனவே இருக்கும் சலுகையை ஏன் பறிக்க வேண்டும்? இந்தப் பொருள்களை பெரும்பாலும் ஸ்திரீகள் தான் விற்கிறார்கள். எனவே தாய்மார்களுக்கு இந்தச் சலுகையை மீண்டும் கொடுக்கவேண்டும். 12-50 p.m.

விற்பனை வரியினால் வியாபாரிகளுக்கு இருக்கும் தொந்தரவுகளில் பெரும்பான்மையானது, அதிகாரிகளால் ஏற்படும் தொந்தரவு. இன்றுள்ள சட்டத்தில் அதிகாரிகளுக்கு ஜாஸ்தி அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. எல்லா அதிகாரிகளுமே தவறு செய்கிறார்கள் என்று நான் சொல்லவில்லை. எந்த அதிகாரியும் தவறு செய்வதில்லை என்றும் நான் கூறவில்லை. வியாபாரிகள் சமூகத்திலேயே வெறுக்கத்தக்க கூட்டத்தினராகக் கருதப்படுகின்றனர் என்று எனக்கு முன் பேசிய கனம் அங்கத்தினர் சொன்னார். கள்ள மார்க்கெட் கூட்டமே வியாபாரிகளிலிருந்துதான் வந்திருக்கிறது. வியாபாரிகள் எல்லோருமே அநியாயம் செய்பவர்கள் அல்ல என்று நான் சொல்ல விரும்புகிறேன். வியாபாரிகளிடையேயும் நியாயஸ்தர்கள் இருக்கிறார்கள். நியாயமான வியாபாரிகள் அதிகாரிகளால் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். அநியாயம் செய்யும் வியாபாரிகள் அதிகாரிகளிடமிருந்து தப்பித்துக்கொள்கிறார்கள். 10,000 ரூபாய் மொத்த வருட வருமானம் வரையிலும் விற்பனை வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. ஒரு வியாபாரிக்கு உண்மையிலேயே வருடத்தில் 9,500 ரூபாய்க்கு வியாபாரம் நடந்திருக்கலாம். ஆனால், அவர் அந்தக் கணக்கை அதிகாரியிடம் காண்பித்தால் அதிகாரி அதை ஒப்புக்கொள்ளமாட்டார். அவர் அந்த வியாபாரிக்கு 15,000 ரூபாய்க்கு "அஸெஸ்" பண்ணுவார். இப்படிப்பட்ட சிறு தொகைகள் கணக்காகக் காண்பிக்கப்படும்போது சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் ஜாஸ்தியாகத்தான் அஸெஸ் பண்ணுவார்கள். பொதுவாகவே, வியாபாரிகளைத் தொந்தரவு செய்யக்கூடாது என்ற நல்ல ஆலோசனை எல்லா அதிகாரிகளுக்கும் கொடுக்கப்படவேண்டும். இல்லாவிட்டால், சாதாரண வியாபாரிகள் மட்டுமின்றி பெரிய வியாபாரிகளும் தொந்தரவுகளுக்கு ஆளாவார்கள்.

காய்கறிகளின் மீதும், உணவுப் பொருள்களின் மீதும் உள்ள விற்பனை வரியை பூரணமாக நீக்கிவிடவேண்டும் என்று கனம் அமைச்சரைக் கேட்டுக் கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

* SRI G. ANNAMALAI MUTHURAJA : கனம் சபைத் தலைவர் அவர்களே, விற்பனை வரி சம்பந்தமாக சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். சீக்கிரம் கெட்டுப் போகும் பொருள்களாகிய பழம், புஷ்பம், பால், காய்கறி, வெற்றிலை, இலை இவைகளுக்கு முன்பு விற்பனை வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருந்தது. இந்த மசோதாவில் அவைகளுக்கும் வரி விதிக்கப்பட்டிருக்கிறது. இங்கே ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் முதன் மந்திரியாக இருந்ததற்கு முன்பு; இந்தப் பொருள்களுக்கு விற்பனை வரி வசூலிக்கப்பட்டு வந்தது. அவைகள் சீக்கிரம் கெட்டுப்போகும் பொருள்களாக இருப்பதால் அவைகளுக்கு விற்பனை வரி விதிக்கக்கூடாது என்று ஸ்ரீராஜகோபாலாச்சாரியார் அவைகளுக்கு இந்த வரியிலிருந்து விலக்கு அளித்தார். இந்த அரசாங்கத்தார் இப்போது அவைகளுக்கு மறுபடியும் வரி விதிக்க முன்வந்திருக்கிறார்கள். அவைகளுக்கு வரி விதிப்பதால் பொதுஜனங்களுக்கும், வியாபாரிகளுக்கும் பலவிதமான இடைஞ்சல்கள் ஏற்படுகின்றன. ஆகையால், நன்றாக யோசனை செய்து, வரியினின்றும் ஏற்கனவே விலக்களிக்கப்பட்டிருந்த பொருள்களுக்கு இம்மசோதாவில் வரி விதிக்க வேண்டாம் என்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன். இந்தப் பொருள்களுக்கு விலக்கு அளித்தால் அரசாங்கத்திற்கு வருமானம் குறையும் என்று நினைக்க வேண்டாம். அதை வேறு விதத்தில் சரிக்கட்டலாம். தாராளமாக வருமான வரி கொடுக்கும் பெரிய வியாபாரிகள் இருக்கிறார்கள். அந்தப் பெரிய வியாபாரிகள் நேர்மையாகக் கணக்கு வைத்திருப்பார்கள். அவர்களுடைய அந்தக் கணக்குகளைப் பார்த்து அவர்களுக்கு சரியான அளவில் நாம் வரி விதிக்கலாம். கனம் நண்பர் ஸ்ரீ சசிவர்ணத் தேவர் சொன்னதுபோல், ஸ்திரீகள் வியாபாரம் செய்தால், அவர்கள் கணக்கு வைத்துக்கொள்வது கஷ்டம். ஆகையால் இதை நன்றாகப் பரிசீலித்து, சிறு வியாபாரிகளும், ஸ்திரீகளும் விற்கும் பழங்கள், காய்கறிகள் முதலிய விரைவில் கெட்டுப்போகும் பொருள்களுக்கு வரியிலிருந்து விலக்கு அளிக்கவேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

நாட்டுச் சர்க்கரைக்கும், வெல்லத்திற்கும் இந்த மசோதாவில் விற்பனை வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. அவைகள் சீக்கிரம் கெட்டுப்போகும் பொருள்களா ? இவைகளுக்கு ஏன் வரி போடக்கூடாது என்று எனக்குத் தெரியவில்லை. அவைகள் எவ்வளவோ காலத்திற்குக் கெடாமல் இருக்கும். அவைகளுக்கு வரியிலிருந்து விலக்களித்திருக்கும் போது, சீக்கிரம் கெட்டுப்போகும் பொருள்களுக்கு ஏன் விலக்கு அளிக்கக் கூடாது ? கூடியவரையில், ஏற்கனவே வரியிலிருந்து விலக்கு அளிக்கப் பட்டிருக்கும் சரக்குகளுக்கு மீண்டும் விலக்கு அளிக்க வேண்டும் என்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொண்டு என் வார்த்தையை முடித்துக் கொள்கிறேன்.

* SRI S. M. ANNAMALAI : மன்றத் தலைவர் அவர்களே, இப்போது இந்த மசோதாவைக் குறித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். விற்பனை வரி என்பது பொது மக்களிடமிருந்து வியாபாரிகள் மூலம் வசூலிக்கப்படும் வரி. நம் மாநிலத்தில், விற்பனை வரியானது ஏறத்தாழ 15 கோடி ரூபாய்க்கு மேல் வசூலிக்கப்படுகிறது என்று அரசாங்கத்தின் புள்ளி விவரங்களிலிருந்து தெரியவருகிறது. அப்படியானால், நம் மாநிலத்தில் ஒவ்வொருவனும் விற்பனை வரியாக ஏறத்தாழ சராசரி ஐந்து ரூபாய் கொடுத்து வருகிறான். மற்ற மசோதாக்களில் " ஆப்ஜெக்ட்ஸ் ஆண்ட் ரீசன்ஸ் " சொல்லப்பட்டிருக்கும், இந்த மசோதாவில் அவை சொல்லப்படவில்லை, இந்த மசோதா சட்டமாகி அமலுக்கு வந்தால், அரசாங்கத்திற்கு விற்பனை வரியின் மூலம் அதிக வருமானம் வருமா, அல்லது இப்போது வருவதை விட குறைவாக வருமா, அதிகமாக வருமானால் எவ்வளவு பணம் அதிகமாக வரும், குறைவாக வருமானால் எவ்வளவு பணம் குறைவாக வரும் என்று கூட ஒரு குறிப்பு கொடுக்கப்படவில்லை.

10th February 1959] [Sri S. M. Annamalai]

விற்பனை வரியை வியாபாரிகள் பாமர மக்களிடமிருந்து வசூலித்து விடுகிறார்கள். வியாபாரிகள், தாங்கள் வசூலித்த விற்பனை வரித் தொகையை சரியாக சர்க்காருக்குக் காட்டாமல் ஏமாற்றுகிறார்கள். மேலும், சில உத்தியோகஸ்தர்கள் விற்பனைவரியை சரிவர வசூலிக்க முடியாமல் இருக்கிறார்கள். எனவே இந்த மசோதாவை, நன்றாகப் பரிசீலித்து நல்ல முறையில் சட்டமாக்க வேண்டும். சர்க்கார் போடும் விற்பனை வரி பாமர மக்களை பாதிக்கக்கூடாது. பலமுனை விற்பனை வரி கூடாது என்ற காரணத்தால் தான், டாக்டர் லோகநாதன் அவர்களைக் கொண்டு இப்பிரச்னையை ஆராயச் செய்து அவருடைய அறிக்கையைப் பெற்ற பிறகு இந்த மசோதா இம் மன்றத்திற்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறது. குறிப்பாக, பல கனம் உறுப்பினர்கள் கூறியதுபோல், உணவு தானியங்களின் மீது போடப்படும் வரி பாமர மக்களை பாதிக்கும். வரி வசூலிக்கப்பட வேண்டியவருக்கு இருக்க வேண்டிய குறைந்தபட்ச வருட வருமானம் 10,000 ரூபாய் என்று மசோதாவில் கண்டிருக்கிறது. இந்த வரம்பு சிறிய வியாபாரிகளைக் கூட பாதிக்கும். தினமும் ஒரு பட்டணம் படி அரிசி வாங்கும் மனிதன் கூட இதனால் பாதிக்கப்படுகிறான். ஒரு சிறு வியாபாரி இரண்டு மூட்டை நெல்லை வாங்கி அதை அரிசியாக அரைத்து பஜாருக்கு கொண்டுவந்து விற்றால், அவனுக்கு 60 ரூபாய்க்கு ஒரு ரூபாய் கிடைக்கும். அவன் தினமும் அவ்வளவு அரிசி விற்றால், தினமும் 60 அல்லது 65 ரூபாய்க்கு வியாபாரம் செய்தால், வருடத்திற்கு ஏறத்தாழ 20,000 ரூபாய்க்கு வியாபாரம் செய்வான். எனவே அந்த சிறிய வியாபாரிகூட அந்த வரியினால் பாதிக்கப்படுவான். இவ்வாறு, சிறிய வியாபாரிகளை இந்த வரி மிகவும் பாதிக்கும் என்று சொல்ல விரும்புகிறேன்.

கூட்டுறவுச் சங்கங்கள் கூட விற்பனை வரியினால் மிகவும் பாதிக்கப்படுகின்றன. கூட்டுறவுச் சங்கங்கள் மேலும் மேலும் அதிகரிக்க வேண்டும் என்று சொல்லப்படுகிறது. கூட்டுறவுச் சங்கங்கள் தனிப்பட்டவர்களுடன் போட்டி போட முடியாது. எனவே கூட்டுறவுச் சங்கங்களுக்கு விற்பனை வரியினின்றும் விலக்கு அளிக்க வேண்டும். இந்த மசோதாவில் கூட்டுறவுச் சங்கங்களும் விற்பனை வரிக்கு உட்படுத்தப்பட்டிருக்கின்றன.

இந்த மசோதாவில் பிண்ணாக்கிற்கும் விற்பனை வரி போடப்பட்டிருக்கிறது. பிண்ணாக்கு மாடுகளுக்கு போடப்படுகிறது. விவசாயத்திற்கு பிண்ணாக்கு உபயோகப்படுகிறது. இப்படிப்பட்ட பிண்ணாக்கிற்கு ஏறத்தாழ 3 சத வீதம் விற்பனை வரி போடப்பட்டிருக்கிறது. பிண்ணாக்கு சாப்பிடும் மாடுகளை வளர்ப்பவர்கள் பாமர மக்கள். பிண்ணாக்குக்கும் வரி போடப்பட்டால், கிராமங்களிலுள்ளவர்கள் மாடுகளை வைத்து நிர்வகிப்பதே மிக மிகக் கஷ்டமாகிவிடும். மாடுகளை வைத்து நிர்வகிப்பது இப்போதே கஷ்டமாக இருக்கிறது. ஒரு மூட்டை தவிட்டின் விலை 4–5 ரூபாயாக இருக்கிறது.

1 p.m.

இப்பொழுது மாடுகளைக்கூட விற்றுவிடலாம் என்ற நிலையில் இருக்கிறார்கள், விவசாயிகள். அப்படியிருக்க, பிண்ணாக்கிற்கும் 3 சத வீதம் நம் சர்க்கார் வரி விதித்தால் உண்மையிலேயே அது கிராமப்புறங்களிலுள்ள பாமர மக்களைத்தான் பாதிக்கும். அடுத்தபடியாக, கிரஸின் ஆயில். அதற்கு 5 சத வீதம் வரி விதித்திருக்கிறார்கள். மண்ணெண்ணை கிடைக்காமல் மக்கள் மிகவும் அவதிப்படுகிறார்கள். குறிப்பாக சென்னை மாநிலத்தை பொறுத்த மட்டில் அது இங்குள்ள மக்களை மிகவும் அதிகமாகப் பாதித்திருக்கிறது. மின்சாரம் நாளுக்கு நாள் அதிகப்பட்டு வரும் இந்நாளில் மண்ணெண்ணையின் மேல் போடப்படும் வரி பாமர மக்களைத்தான் பாதிக்கும், தவிர, நகரப்புறங்களில் உள்ளவர்களை அது பாதிக்காது. காரணம், நகரப்புறங்களில் இருப்பவர்கள் மின்சார விளக்குகள் போட்டு வாழ்க்கையை நடத்துகிறார்கள். கிராமப்புறங்களிலுள்ள மக்கள்தான் மண்ணெண்ணையை அதிகமாக உபயோகிக்கிறார்கள் ஆகவே மண்ணெண்ணைக்கு 5 சத வீதம் வரி விதித்திருப்பது உண்மையிலேயே வருந்தத்தக்கதாகும். கடைசியாக 7,500 ரூபாய்க்கு வியாபாரம் செய்பவர்கள் ரெஜிஸ்டர் செய்யவேண்டுமென்று இருக்கிறது. அதை 10,000 ஆக ஆக்க வேண்டுமென்று சொல்லிக் கொண்டு 59-வது பிரிவில் ஷெடியூலை அரசாங்கம் எப்பொழுது வேண்டுமானாலும் திருத்தலாம் என்றிருக்கிறது. ஜனநாயக ரீதியில் எந்தவித

[Sri S. M. Annamalai] [10th February 1959

திருத்தங்கள் கொண்டுவரவேண்டுமென்றாலும் சட்டமன்றத்தில் அது கொண்டு வரப்பட்டு சட்ட மன்றத்தின் அனுமதி பெற்றே அது கொண்டு வரப்படவேண்டுமேயொழிய சட்டமன்றத்தின் அனுமதியில்லாமல் சர்க்கார் எப்பொழுது வேண்டுமானாலும் திருத்தலாம் என்பதற்கு அதிகாரம் தரக் கூடிய 59-வது பிரிவை ஷெடியூலை நீக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனது பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

SRI V. SUBBIAH : தலைவர் அவர்களே, விற்பனை வரியானது ராஜாஜி அவர்களால் 1939-ம் ஆண்டில் கொண்டு வரப்பட்டாலும் கூட இன்று 59-ம் ஆண்டில் புது ரூபத்தில் லோகநாதன் அவர்கள் அறிக்கையின் பேரில் கொண்டு வரப்பட்டிருக்கிறது. இது பற்றி பல அங்கத்தினர்கள் பேசியிருந்தாலும்கூட, முக்கியமாக விவசாய உற்பத்தியைப் பாதிக்கக்கூடிய விதத்தில் சில விவசாயப் பொருள்களுக்கு மட்டுமில்லாது விவசாயப் பொருள்களை உற்பத்திசெய்யக்கூடிய உரப் பொருள்களுக்கும் 3 சத வீதம் வரி போடப்பட்டிருக்கிறது. இன்று இந்நாட்டில், தழைப் பொருள்கள் இல்லாத நிலையில் இன்று விவசாயிகள் புண்ணாக்கைத்தான் நம்பியிருக்கிறார்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. அதுபோல் ரசாயன உரங்கள், 'மன்யூர்களை' எடுத்துக் கொண்டால், அம்மோனியம் சல்பேட், நைட்ரேட், யூரியா, எலும்புத்தூள் 'போன்மீல்' போன்றவைகள் விவசாயத்திற்கு மிக முக்கியமான உரப்பொருள்களாகும். இவைகளுக்கெல்லாம் இன்று அரசாங்கம் புதிதாக 3 சத வீதம் வாச்சில் விற்பனை வரி போட்டு இருப்பது விவசாயத்தைப் பாதிக்கும், அதாவது விவசாய உற்பத்தியைப் பாதிக்கும் என்பதுதான் எனது தாழ்மையான அபிப்பிராயம். இப்படியானால் விவசாயத்தைப் பெருக்க வேண்டுமென்று நாம் சொல்வதில் ஒருவித அர்த்தமும் கிடையாது.

(Mr. Speaker in the Chair.)

சட்டமன்றம் இந்த நாட்டில் ஏற்பட்டதில் இருந்து நாம் புதிது புதிதாக வரிகள் போட்டுக் கொண்டேயிருக்கிறோம், என்பதைத் தவிர இருப்பதை வைத்துக் கொண்டு, இருக்கக்கூடிய சட்டங்களை வைத்துக் கொண்டு, இருக்கக் கூடிய வரிகளை வைத்துக் கொண்டு சிக்கனமாக ஆட்சி செய்ய வேண்டுமென்ற எண்ணமே ஆட்சியாளருக்கு இல்லாமல் போய்விட்டது, என்று மக்கள் நினைக்கும் விதத்தில் போய் கொண்டிருக்கிறார்கள். காய் கறி போன்றவைகளுக்கு எல்லாம் விற்பனை வரி வந்துவிட்டது என்றால் மக்கள் என்ன நினைப்பார்கள் என்று நீங்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். விவசாயிகள் கொடுக்காத எதாவது ஒரு வரி இந்த நாட்டில் இருக்கிறதா ? விவசாய வருமான வரியிலிருந்து, டீஸல் ஆயிலுக்குள்ள வரி வரையில், மத்திய மாகாண அரசாங்கம் போடுகிற எல்லா வரிகளையும் விவசாயிகள் மறைமுகமாகவாவது கொடுக்க வேண்டியிருக்கிறது. நேரடியாக நெல் தீர்வை கொடுப்பதோடு விவசாயி மறைமுகமாக பல வரிகள் கொடுக்க வேண்டியிருக்கிறது. புண்ணாக்கு, ரசாயன உரங்கள் போன்றவைகளுக்கு இன்று வரி விதிக்கப்பட்டிருக்கிறது. அம்மோனியம் சல்பேட், நைட்ரேட் போன்ற ரசாயன உரங்கள் இன்று விவசாயிகளுக்கு எப்படி கிடைக்கிறது என்று சிந்தித்துப் பார்க்கவேண்டும். இந்த வருட ஸீஸனில், அம்மோனியம் சல்பேட் மூட்டை ஒன்று 35 ரூபாய்க்கு விற்றது. சிறிய விவசாயிகள் ப்ளாக் மார்க்கெட்டில் 55 ரூபாய் கொடுத்து வாங்கினார்கள் என்பதை யாரும் மறுக்கமுடியாது. அப்படிப்பட்ட கேஸ்கள் பல பிடிக்கப்பட்டிருக்கின்றன. இப்படி ரசாயன உரங்களை கூடுதல் விலை கொடுத்து விவசாயிகள் வாங்குகிறார்கள். நிலைமை இப்படியிருந்தால் உணவு உற்பத்தியை எப்படி பெருக்க முடியும் ? விலைவாசிகள் உயர்ந்து விட்டது என்று சொல்லக்கூடிய அரசாங்கம் இப்படி புதிது புதிதாக வரிகளைக் கொண்டு வருகிறார்களே ? அடுத்தபடியாக, நவீன இயந்திர சாதனங்களை புகுத்த வேண்டுமென்று சர்க்கார் சொல்லும்போது, அதே சமயத்தில் ட்ராக்டர்ஸ், புள்டோஸர்கள் போன்ற கருவிகளுக்கும் 3 சத வீதம் வரி போடப்பட்டிருக்கிறது. யந்திர மயமாக்க மெக்கானிக்கல் கல்டிவேஷன், வேண்டுமென்று சொல்லும்போது, இம்மாதிரி ட்ராக்டர்ஸ்,

புள்டோஸர்கள் போன்றவைகளுக்கு இப்படி 3 சத வீதம் வரி போட்டால் என்ன செய்வது ? அதேபோல் மில்லட், கம்பு, கேழ்வரகு போன்ற முக்கியமான உணவுப் பொருள்களுக்கும், குழந்தைகள் சாப்பிடக்கூடிய பால் பவுடர், பால் போன்றவைகளுக்கும் வரி விதிக்கப்படுகிறது. விவசாயிகள் உற்பத்தி செய்து மார்க்கெட்டில் கொண்டு வரும்போதும் வரி விதிக்கப்படுகிறது. விவசாயத் துறையில் பொருளாதார முன்னேற்றம் காண முடியவில்லை என்று கிராம மக்கள் நகரப்புறங்களில் வந்து வியாபாரம் செய்யலாம் என்று நினைத்தால் விற்பனை வரி அவனை எந்தளவிற்கு கொண்டு வந்துவிடுகிறது என்று பார்க்க வேண்டும். இரண்டு வித கணக்குகள் வைத்துக் கொள்ளாமல் நேர்மையாக காலத்தைக் கடத்த வேண்டுமென்று நினைத்து வியாபாரம் செய்யப்போனால் இந்த விற்பனை வரி அவனை பொய் சொல்ல வைக்கிறது, இரண்டு கணக்குகள் வைக்கச் செய்கிறது. அதுமட்டுமல்ல. மனசாட்சிக்கு விரோதம் இல்லாமல் வியாபாரம் செய்ய வேண்டுமென்று விரும்பிய எனது நண்பர்கள் சிலர் அந்தத் தொழிலையே விட்டு விட்டு வெளியே போகும் நிலையில் இன்று கஷ்டப்படுகிறார்கள். ஆக, ஒழுங்கானவர்கள் இந்த நாட்டில் ஜீவிப்போம் என்றால், தவறு இழைக்காது வாழ்க்கை நடத்த விரும்பி நேர்மையாக நடந்தவர்கள் இன்று தெருவில் நிற்கக் கூடிய அளவிற்கு இந்த விற்பனை வரி அவர்களைக் கொண்டு வந்து வைத்து விட்டது எனக்குத் தெரியும். உணவுப்பொருள்களுக்கும், உரப் பொருள்களுக்கும் போடப்பட்டிருக்கிற வரி விவசாயிகளை, ஏழை மக்களை எவ்வளவு தூரம் பாதிக்கிறது, எத்தனை தடவை அவர்கள் வரி கொடுக்க வேண்டியிருக்கிறது என்று பார்த்து எங்கு அவை உற்பத்தியாகிறதோ அந்தயிடத்திலேயே வரி போட வேண்டும். சாமான்களுக்கு அவைகளின் உற்பத்தி ஸ்தலத்திலேயே டாக்ஸ் போட்டு அனுப்பினால் அது வரவேற்கத்தக்கதாகயிருக்கும். இப்பொழுது அது பல ரூபங்களில் போய்க்கொண்டிருக்கிறது. ஆகவே, கடைசியாக, விவசாயிகள் உபயோகிக்கும் இனங்களின் மீதுள்ள வரியை கொஞ்சம் குறைத்தோ அல்லது நீக்கியோ ஏதாவது செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டு எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

MR. SPEAKER : Is any hon. Member anxious to speak now? (After a pause.) As no hon. Member is anxious to take part in the discussion just now, I adjourn the House till 9 a.m. tomorrow.

The House then adjourned.

வாய்மையே வெல்லும் TRUTH ALONE TRIUMPHS

## V.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### A.—*STATUTORY ORDERS, RULES AND NOTIFICATIONS.*

80. *Notification issued with G.O. Ms. No.* 3448, *Home, dated* 10*th December* 1958 *amending rule* 337 *of the Madras Motor Vehicles Rules*, 1940. [*Laid on the table of the House under section* 133 (3) *of the Motor Vehicles Act*, 1939 (*Central Act IV of* 1939.]

81. *Notification issued with G.O. No.* 44, *Local Administration, dated* 9*th January* 1959, *extending the terms of office of the Members of the Ambasamudram Panchayat, Tirunelveli District, under section* 10 (1) *of the Madras Village Panchayats Act*, 1950. [*Laid on the table of the House under section* 113 (4) *of the Madras Village Panchayats Act*, 1950 (*Madras Act X of* 1950.]

